கழக வெளியீடு: ௲௬௭

# மேனாட்டறிஞர் கண்ட

# தமிழகம்




தொகுத்துத்

தமிழில் தந்தவர்

திரு. வரத. வீரப்பன் அவர்கள்,

புதுவை.





திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்.

திருநெல்வேலி :: சென்னை - 1.

# பதிப்புரை

வரலாற்றுக்காலத் தொடக்க நாளிலிருந்தே உலகுடன் வணிக முதலாய உறவுபூண்டு மேனாட்டார் பலராலும் பலகாலத்தும் பாராட்டப்பெற்ற பெருமைமிக்கது நம் பழமைமிக்க பைந்தமிழ்த் திருநாடு.

அவர்கள் பாராட்டுரைகள் பலவற்றுள்ளும் சில பகுதிகள் தொகுக்கப்பெற்றுத் தமிழாக்கமுடன் இச் சிறு நூலின்கண் தரப்பட்டுள்ளன. பரந்து பல்கி நிலவும் மேனாட்டறிஞர் நூல்களில் தமிழகம்பற்றி வரும் பிறவற்றையும் இதனை அடுத்துத் தொகுத்துத் தர எண்ணியுள்ளோம்.

இதனை நன்முறையில் திரு. புதுவை வரத. வீரப்பன் அவர்கள் ஆக்கித் தந்தமைக்கு எங்கள் நன்றி உரியது.

இந்நூல் தமிழர் உளங்களில் பழம்பெருமை நினைவுகளைக் கிளர்ந்தெழச் செய்து புதுவீறுமிக்க தமிழ்ச் செல்வர்களாய்த் தமிழர் விளங்க ஒருவாறு உதவும் என நம்புகின்றோம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# உள்ளுறை

# மேனாட்டறிஞர் கண்ட தமிழகம்



## க. எல்லைகள்

**வடஎல்லை கங்கைக்கரை வரை**

டாலமி காலத்தில், இந்தியாவின் ஒவ்வொரு பகுதியும் நெடுங்காலமாகவே நிலையாகக் குடியேறப் பெற்றுச் சீர்திருந்தி விளங்கியது. அஞ்ஞான்று தென்கிழக்குக் கரையோரமேயன்றிச் சற்றேறக் குறையக் கங்கையாற்றின் கழிமுகம் வரையாக வுள்ள தீவக்குறை முழுவதையும் தமிழர் உறைவிடமாகக்கொண்டு அமைதியாக வாழ்ந்து வந்தனர்.

—கால்டுவேல்.

**வடஎல்லை ஒரிசாக்கடற்கரை வரை**

ஒரிசாக் கடற்கரையினின்று குமரிமுனைவரையும், இம்முனையினின்று மலையாளக் கடற்கரையூடே மேல்நோக்கிக் கொச்சிவரையும் தமிழ்மொழி பேசப்படுகிறது. இந் நிலப்பகுதியில் உள்ள புலவர்கள் செய்யுள்வடிவில் நூல்கள் இயற்றுகின்றனர். இதனால் பெரும்பாலோர்க்குச் செவ்வையாகப் படிக்கத் தெரிந்திருந்தும் அவற்றின் பொருள் விளக்கமாவதில்லை,

—சோன்னேரா.

**வடஎல்லை கோதாவிரிக்கரை வரை**

வடபாலில், கோதாவிரியாறு பீஜப்பூர் எல்லை தொட்டுக் குமரிமுனைப் பகுதியின்கண் உள்ள தொடர்மலைகளுள், மிகப் பெரியதொன்றின் (ஆனை முடி 8850 அடி) கீழ்ச்சாரல் வரையும், தெற்கிலும் கிழக்கிலும் கடற்கரைகளால் சூழப்பெற்றுப் பரந்து விளங்கும் மாபெரும் நாடொன்றுளது. இதனுள் ஒரு பகுதி "பாண்டியோன்" நாடாகும். இதனை அராபியர் கருநாடகம் எனப் பெயர்வழங்கினர். இம்மாநிலத்தின் கடற்கரைப் பாங்கரிலும் உட்புறத்தேயும் அரசுகள் பல நிறுவப் பெற்றிருந்தன. அவற்றின் பெயர்கள் இன்றளவும் நிலவுகின்றன. அரியணைகளோவெனில் அடியோடு அழிந்து போயின.

—தேமர்லே.

**வடஎல்லை கிருட்டிணாநதிக்கரை வரை**

நள்ளிகைக்கு 16-ஆம் பாகையில் உள்ள கிருட்டினையாற்றின் ஊற்றுக்கண் தொடங்கி அவ்யாறு கடலோடு கலக்கும் இடம் முடிய நீண்டு விளங்கும் நிலப்பகுதியைப் பாண்டிய மக்கட் டொகுதியின் வாழிடத்து வடவெல்லையாகக் குறிக்கின்றார் பிளினி. அம்மக்கள் மிகுந்த வல்லமையுடையராய்த் திகழ்ந்தனர்; முந்நூறு நகரங்களில் வாழ்ந்தனர். 1,50,000 போர் மறவர்கள் அடங்கிய படையைத் திரட்டும் ஆற்றல் மிக்கவராய் மிளிர்ந்தனர். இவர்கள் உறைவிடம் குமரிமுனைவரை நீண்டு "பாண்டி

மண்டல ”மெனப் பிளினி கூறும் அரசியலாக உருவாகியது. இந்தப் பண்டைக்காலத்துப் பாண்டிய அரசர் கால்வழியினரே, இந்திய வரலாற்றின்படி, 362 தலைமுறைகளாக மதுரையில் செங்கோலோச்சியவர்.

—கோலென்தேபார்.

வடஎல்லை பெண்ணையாறு வரை

தமிழ்மண்டிலத்தின் நிலப்பரப்பு, வங்காளக் குடாக்கடலின் கரையோரத்திருந்து தொடர்மலைகளின் கிழக்குக் கரையினது அடிவாரம் வரை ஒருபுறமும், நள்ளிகைக்கு மேற்பாலில் 13° 54′ ஆம் குறியீட்டுக்கும் உச்சத்திற்கு 78° 3′ ஆம் குறியீட்டுக்கும் இடையேயுள்ள பெண்ணையாறு முதல் சோழமண்டலம் என்று அழைக்கப்பெறும் கடற்கரையின் எல்லையிறுதியாகும் கள்ளிமேட்டு (கலிமீர்) முனையீறாக அகன்றுள்ளது,

—லேகூதேப்ளேக்க்.

வடஎல்லை நெல்லூர் வரை

விந்தியமலை என்றென்றும் ஆரியநாட்டிற்கும் தமிழ்நாட்டிற்கும் இடையே இயற்கையால் எழுந்த எல்லையாக அமைந்துள்ளது. தொடர்நிலைச் செய்யுட் புலவர்கள் (பெருங்காப்பியப் புலவர்கள்) தமிழகத்துப் பேரரசுகளைக் குறிப்பிட்டிருக்கின்றனரேனும், அவைகளைப்பற்றி மிகச் சிறிதளவே அவர்கள் அறிந்தனர் ஆதல் வேண்டும். அவைகளைச் சேர சோழ பாண்டிய அரசுகள் என்பர்.

இக்காலத்து மதுரை திருநெல்வேலி மாவட்டங்களின் பெரும்பகுதி அடங்கிய பாண்டியநாட்டின் மிகப் பழமையான தலைநகர், திருநெல்வேலியில் தாம்பிரபரணி யாற்றங்கரையில் அமைந்த கொற்கையாகும். இத்தலைமைப்பேற்றைப், பிற்றை நாளில் மதுரைமா நகரம் பறித்துக்கொண்டது. சோழநாடு ஒருகால் "கொரமாண்டல்" கரையில், நெல்லூரிலிருந்து புதுக்கோட்டைவரை நீண்டும், அதன் மேற்கெல்லை கி. பி. 7-ஆம் நூற்றாண்டில் இக்காலத்துக் கடப்பை மாவட்ட வரம்பு மட்டும் சுருங்கியதென்றாலும், முன்னர்க் குடகு (Kurg) நாட்டு எல்லைப்புறம் வரையும் அகன்றிருந்தது. உறையூர் (பழைய திருச்சிராப்பள்ளி) சோழநாட்டின் தலைநகராகவும் காவிரிப்பூம்பட்டினம் இதன் துறைமுகப்பட்டினமாகவும் விளங்கின. திருவாங்கூர் மலையாளமாவட்டம் கொச்சி இவ்விடங்களிலும் சுற்றுப்புறங்களிலும் சேரர் அல்லது கேரளர் தங்கி வாழ்ந்தனர். கொச்சியின் அருகே பெரியாற்றங்கரையிலே உள்ளதும், பின்னை நாளில் திருவஞ்சிக் களத்திற்குத் தோற்றுவாயாக விருந்ததும், இன்று திருக்கரூர் என்று பெயரிட்டழைக்கப் பெறுவதுமான வஞ்சியே, சேரநாட்டின் பழைய தலைநகராகும். கொங்குநாடு (கோயம்புத்தூரும் தென் சேலமும்) பிந்திய காலத்தில் "கேரளா" என்னும் பெயர் ஏற்றிருந்ததாயினும் இதனினின்று தனித்தே விளங்கியது.

—பர்னெட்

### அசோகன் காலத்தில் தமிழகத்தின் வட எல்லை

அசோகரின் நேர் ஆட்சிக்குட்பட்ட நாடுகளிலும், நன்கு வரையறுக்கப்பெறாத பாதுகாப்பின் கீழ் இவர்தம் தலைமை ஆட்சியோடு இணைந்திருந்த நாடுகளும் சேர்ந்து, தெற்கே நலமுற நிறுவப்பெற்ற பழந்தமிழ் நாடுகளின் எல்லைகளைத் தொடுமாறு பரந்து விளங்கின............

நெல்லூருக்கு அணித்தேயுள்ள வடபெண்ணையினின்று மேற்குக் கடற்கரையில் உள்ள கலியாண புரியாற்றுக்கும் (கடப்பையினூடே சித்தல் துர்க்கத்திற்குத் தெற்காக) நீவக்குறையின் கடையிற்றுக்கும் பரந்திருந்த தமிழ்நாடுகள் தென்புறத்தில், அல்லது மலையாளக் கடற்கரையில் விளங்கிய கேரள புத்திர, சத்திய புத்திர நாடுகளைப்போலவே தன்னரசு உரிமையுடையனவாக மிளிர்ந்தன என்பதில் ஐயுறவில்லை.

—ஸ்மித்.

### வடவெல்லை அன்றும் இன்றும்

தென்னாட்டின் அகன்ற நிலத்தை இன்று வழக்கிலுள்ள சொல்லாட்சித் துணைகொண்டு விரித்துரைப்பின், "வட சர்க்கார்" மாவட்டங்கள், விசாகப்பட்டினம் கஞ்சம் மாவட்டங்கள் இவையிற்றினைச் சென்னை (இராசதானி) வளநாட்டினின்று கழித்துத், தன்னரசு ஆட்சிக்குட்பட்ட மைசூர், கொச்சி, திருவிதாங்கூர் குறுநிலங்களை அதனோடு கூட்டினால் உளதாகும் நிலப்பரப்புக்கு நேர்

என்னலாம். தமிழர் இனமும் தமிழ்மொழியும் இயல்பாகவே நிலவும் நல்லுலகம் இதுவாகும். இதற்கிணைந்தவாறு, பண்டைநாளில் அதன் பெரும் பகுதிக்குத் தமிழகம் அல்லது தமிழ்நாடு என்றே பெயர் வழங்கியது. கிழக்குக் கடற்கரையில் சென்னைக்குச் சிறிது மேற்புறத்தில் உள்ள புலிக்கட்டை (பழவேற்காடு)த் தமிழகத்து வடவெல்லையின் ஓர் இடமாகவும், மேற்குக் கடற்கரையில், மாகிக்கு (Mahe)த் தென்புறத்தும், பாதகாரா (Badagara) விற்கு அணித்தேயும் உள்ள வெண்கல் மலையைப் பிறிதோர் இடமாகவும், இவ் இருமுனைகளையும் ஒன்றுசேர்க்கும் எல்லைக்கோடு, சென்னைக்கு வட மேற்கில் நூறாவது மைலில் இலங்கும் திருவேங் கடம் அல்லது திருப்பதிமலையைச் சுற்றிக்கொண்டு பாதகாராவிற்குத் தென்பாலில் சாய்ந்து செல்லு வதுமாகக் கொள்ளுவது தொல் வழக்கு. தமிழகத் தின் வடகிழக்கு எல்லையை வடபெண்ணைக்கு அண்மையிலுள்ள நெல்லூர் வரையும், வடமேற் கெல்லையை மங்களூருக்குத் தென்புறத்தில், சந்திர கிரியாறு வரையும் பெருக்கிக் கூறுவது பின்னை யோர் வழக்கு.

—ஸ்மித்.

மேற்கெல்லை குடகோடன்று குடகடல்

பிளினி வாழ்ந்த நாளிலும், செங்கடற் செலவு நிகழ்ந்த காலத்தும், மலையாளக் கடற்கரையின் ஒருபகுதி, பாண்டியர் ஆட்சிக் குட்பட்டிருந்ததென்

பது திண்ணம். இப் பாண்டியர் செங்கோலாழி இவர் தம் தலைக்காலத்து அரசியற் பொறுப்பி லிருந்த நாடுகளிலேமட்டும் அன்றிப் புறத்தேயும் நீண்ட தொலைவு பரந்திருந்ததென்பதை விளக்க இஃது ஓர் எடுத்துக்காட்டாகும்........

"நடுநிலத்ததும், வாணிபத் தலைநகருமான மதுரைக்கு நெடுந்தொலைவில் உள்ள மேற்குக் கடற் கரையின் ஒரு பகுதி, பாண்டியமன்னன் அரசாட்சி யின்கீழ் விளங்கிய," எனப் பிளினி தெளிவாகக் குறிப்பிடுகிறார்,

—கால்டுவேல்.

## உ. நிலப்பரப்பு

### நிறையுடை வடிவம்

பண்டைத் தமிழகம் இன்று தமிழ்கூறும் நம் உலகினும் மிக வகன்றிருந்தது. துளு மலையாளம் கன்னடம் வழங்கும் நாடுகள் இதனுள் அடங்கி யிருந்தன. இலங்கைத்தீவும் தமிழ்மொழி பேசும் மக்கள் உறையும் பெருநிலனோடு நெருங்கிய உறவு பூண்டிருந்தது.

—ஸ்மித்.

# ௩. இயற்கையமைப்பும் நிலவளமும்

**புறத்தோற்ற வரலாற்றுச் சுருக்கம்**

குமரிமுனை முதல் கள்ளிமேட்டுமுனையிருகப் பரந்துபட்ட கடற்கரையை முத்துக் குளிக்கும் துறை எனப் பெயரிட்டழைப்பர். இதனை இலங்கைத் தீவினின்று பிரிப்பது மன்னார் வளைகுடா. இப்பகுதியிற்றான் முத்துக்குளியல் மிகுதியாக இடம்பெறுகிறது. கடல்சார்ந்த அந்நிலத்திற்கு அந்நாட்டவர் மறவநாடு எனப் பெயர் வழங்குவர்....

இலங்கைத் தீவைப்போன்றே இராமேசுவரம் என்னும் திட்டும் முற்காலத்தில் இந்தியப் பெரு நிலத்தோடு இரண்டற இணைந்திருந்ததென்றும், நிலநடுக்கத்தின் விளைவாக அது இங்ஙனம் பிளவு பட நேர்ந்ததென்றும் முடிபுகட்டுகின்றனர் சில நூலாசிரியர்கள். இஃதன்றியும், இந்தியாவில் இக்கரைப் பாங்கரில்தான் எரிமலை அனல் உமிழும் காட்சி புலனானது............

கள்ளிமேட்டு முனைக்கு மேற்பாலில், "கொரமாண்டல்," கடற்கரை தொடங்குகிறது. இன்று தஞ்சை மாவட்டம் என்னும் சோழமண்டலத்தைக், "கொரமாண்டல்," என்று பெயர் திரித்து வழங்கினர் போர்த்துக்கேசியர். அந்நாட்டவர் அதனைத் தமிழ்மண்டலம் என்றே அழைப்பர். ஆங்கு மிகுதியாக வாழ்பவர் தமிழர் ஆதலின், மார்க்கோ போலோ காலத்தில், இதனை "மகா பார்," பெரிய நாடு (பார்-உலகு) எனப் பெயரிட்டழைத்தனர்.

"அக்கரை நெடுகவும் ஒரே மணற்காடு. மூன்று மைல் அளவு அகன்று தோன்றும் அம்மணற் பரப்பில் புதர்களும் காட்டுக் கள்ளிகளும் அடர்ந்துள்ளன. அம்மணல் வெளிக்கப்பால், மிகுந்த செழுமை நலம்வாய்ந்த நிலமாக மிளிர்கிறது. ஆண்டு முழுதும் வளம் குன்றாது பயன் ஊட்டும் விளைநிலங்களே எங்கணும் காட்சியளிப்பன........"

தஞ்சை மாவட்டம் ஒரு பொழுதாயினும் மொகலியர் (மொகலாயர்) அரசியற்றலைமைக்கு அடங்கியிருந்ததில்லை.

ஆங்கு வாழ்வோர் கைவினைகளிலும் உழவுத் தொழிலிலும் சிறந்தோர் ஆவர். இவர்தம் வளம் மிகுந்த நாட்டில் தென்னை மரங்கள் வரை இகந்து உள்ளன. அந்நாட்டில் தொண்டைமான் என்னும் பெயருடைய சிறு கோட்டம் ஒன்றுளது. உறையுளாகவும், கடக்க ஏலாத அரணாகவும் அமைந்த மலைகளின் உதவியால், அக்கோட்டத்து மக்கள் அயலார் ஆட்சியினின்று தற்காத்துக்கொண்டனர்.

—தெமர்லே.

புறத்துருவும் பொருள்வளமும்

தொடர்மலைகள் தென்பாலில் கூர்ந்து சென்று ஒன்றுகூடும் நடுவிடத்தே அமைந்த குமரிமுனை, தீவக்குறையின் இருபக்கங்களையும் பிரிக்கிறது. மேற்புறம் மலையாளக் கடற்கரை யென்றும், கீழ்ப்புறம் சோழமண்டலக் கடற்கரை யென்றும் பெயர் பெறும். தாழ்நிலத்தில் உறையும் மறவரும் பரத

வரும் நம்மனோர்க்கு நன்கு விளங்காத உருவ வழிபாடு புரிகின்றனர். இவ்வொருவகைத்தான கடலிணைக்கால் (சலசந்தி) முத்துக்குளியலுக்குப் பரந்த புகழ் வாய்ந்துள்ளது. இந்தியாவிலே காணக் கிடைக்கும் மிகச்சிறந்த முத்துக்கள் குமரிமுனையிலும், தூத்துக்குடியிலும் எடுக்கப்பெறுவதால் இதனை, முத்துக்குளிக்குந்துறை என்று பெயரிடுவாராயினர். ஆங்கே நீரின் அடிப்புறத்தில் உள்ள கற்பாறைகளின்மீது சாம்பல்வண்ண அம்பரும் அகப்படுகிறது. இதன் தூயதன்மை மல்டீவ் (மலைத்தீவு)களிலும் மடகாஸ்கரிலும் எடுக்கப் பெறுவதற்கு இணையானது.

—அபே துய்யோன்.

உலக அரங்கிற்பெற்ற உயர் நிலை

சோழமண்டலக் கடற்கரை, நள்ளிகைக்கு மேற்பாலில் எட்டிலிருந்து பதினெட்டாம் பாகைக்கு நடுவேயும், குமரிமுனையினின்று ஓரிசாக் கடற்கரைவரையும் பரந்துள்ளது. மேலும், இந்தியத் தீவக்குறையின் கிழக்குக் கடலோரத்தும், கங்கைக்கு இப்பாலும் நிலவும் நிலப்பரப்பை அது தன்னுள் அடக்கியுள்ளது. ஆசியாவின் இப்பகுதி எழிலாலும் வளத்தாலும் தலைசிறந்து மிளிர்வதைப் போலவே, நெடுங்காலந்தொட்டுப் பயன் ஊட்டுவதிலும் இணையற்று விளங்குகிறது........

வானத்தின் வனப்பும், காலநிலையின் இனிமையும், சிறப்பாக வளம் கொழிக்கும் விளைபொருள்

களும் பிறவிடங்களினும் இப்பகுதியைத் தகுந்த உறைவிடமாகத் தேர்ந்தெடுக்குமாறு போர்த்துக் கேசியர்க்குத் துணைசெய்தன.

—தேலாப்ளோத்.

பெற்ற நற்பேறும் வாழ்வும்

உலகத்தோர் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட பொன், முத்து, மிளகு, கடல் வன்னக்கல் (கோமேதகம்), ஆய்ந்தெடுத்த பஞ்சு இவையன்ன பிற விளைபொருள்களைத் தமிழகம் பெற்ற நற்பேற்றின் பயனாய்ப், பண்டைக்காலந்தொட்டே அயல் நாட்டு வணிகர்கள் ஆங்குவர விரைந்தனர். தமிழர்கள் நாகரிகமுறையில் வாழ்க்கை நடத்துதற்கு இன்றியமையாத செல்வப் பொருள்களை வாணிபம் குறைவின்றி வழங்கியது ; மேலும், அவர்கள் கடல் கடந்து செல்லவும் அஞ்சினர் அல்லர்.

—ஸ்மித்.

மிளகும் முத்தும் மணிதரு கனிகளும்

வேறெங்கணும் பெறற்கேலா மூன்று அரிய விலைப்பொருள்களைத் தன்னகத்தே பெற்றிருக்கும் நற்பேறுவாய்ந்துள்ளது தமிழ்நாடு. அம்முப் பொருள்களாவன : மிளகு, முத்து, கடல் வன்னக் கல். ஐரோப்பாவின் வாணிப வட்டாரங்களிலிருந்து அளவுகடந்த விலைகொடுத்து மிளகு தருவிக்கப்பட்டது. மேலும், எத்துணை விலையேற்றமுடையதாக அது மதிக்கப்பெற்றதென்றால், கோத் அலாரிக் (Alaric the Goth) என்பவர் கி. பி. 409-இல், போரினால் விளைந்த அழிவுக்கு ஈடு தருமாறு

உரோமையரை நெருக்கியபோது, 3,000 இராத்தல் மிளகு ஒப்படைக்கப்படவேண்டுமென்பதும் அவர் விடுத்த கட்டளையில் ஒரு கூறாக இடம்பெற்றது. இன்றளவும் பயன்தருவதாகவும், சிறப்புடையதாக வும் விளங்கும் தென்கடற்புறத்து முத்துக்குளிக் கும் துறையில் எண்ணிறந்த காலமாகத் தொழில் நடைபெற்று வந்ததோடு, அத்துறையை நாடி எல்லாக்காலத்தும் அயல்நாட்டு வணிகர்கள் குழு வாக வந்தவண்ணமிருந்தனர். பிளினி நன்கு ஆய்ந்து குறிப்பிடுவதுபோல், கோமேதகம் அல்லது கடல் வன்னக்கல், பச்சைக்கல்லோடு (மரகதம்) நெருங் கிய தொடர்புடையதாகும். இஃது, இந்தியர் உரோ மையர் இவரிருவராலும் சிறந்ததொன்றாக மதிக்கப் பெற்றது. செதுக்கு வேலையாளரின் அருமைப்பா டமைந்த கலைநிறைவேற்றத்திற்குத் தேவையான மூலப்பொருள்களாக அது அடுத்தடுத்துப் பயன் பட்டுவந்தது. இந்தியாவேயன்றிப் பிறவிடங்களில் இது அருகித் தோன்றுவதால் திறமைவாய்ந்த போலிப்பொருள்செய்வினைஞர், பளிங்குக் கற்களைக் கொண்டு இதனைப்போலவே சமைத்துத் தருவதில் பேரூக்கங்காட்டினர்.

இந்தியாவின் மணிதரு கனிகள் (சுரங்கங்கள்) மூன்று எனக் குறிப்பு வரையப்பெற்றுள்ளது. அவையாவன: 1. கடல் வன்னக்கல் காணக் கிடைப்பதாக டாலமி குறிப்பிட்ட புன்னடா (Punnata) புனாடு அல்லது புன்னாடு. இஃது

மைசூருக்குத் தென்மேற்கிலே, காவிரியோடு கலக்கும் கபானி (Kabban) யாற்றங்கரையிலே அமைந்த கிட்டூருக்கு அணித்தேயுள்ளது. 2. படியூர் அல்லது பட்டியாலி. இது கோயம்புத்தூருக்கு 40-வது மைலில், கிழக்கிற்கும் தென்கிழக்கிற்கும் நடுவிடத்தேயுள்ளது. இவண் விளங்கிய கனியில் கடந்த 1820-ஆம் ஆண்டுவரையுங்கூடத் தொழில் இனிது நடைபெற்றுவந்தது. 3. சேலம் மாவட்டத்தின் வடகிழக்கு மூலையிலும், கோலார் தங்க வயலுக்கு அண்மையிலும் உள்ள வாணியம்பாடி. இக்கனிகளுக்கு நிலைக்களன்களாக இருந்த மாவட்டங்களில் ஏராளமாக அகப்பட்ட பல்வகை உரோமைய பொற்காசுகள் நிறைந்த புதையல்கள், பழங்காலத்திலே தென்னிந்தியாவில் செம்மணி (இரத்தினம்) விற்பனை பெருக்கமுற்றிருந்தமைக்குச் சான்று பகர்வனவாகும். சிவப்புக்கல் (கெம்பு) நீலக்கல் (இந்திர நீலம்) இவற்றின் இனத்தைச் சார்ந்ததும், சேலத்திலும் கோயம்புத்தூரிலும் மிகுதியாகக் கிடைத்ததுமான கனிப்பொருளாம் குருந்தக்கல் தூய தமிழ்ப்பெயர் (குருந்தம்) ஏற்றிருப்பதொன்றே, இந்தியாவின் அருமணிக் கனிகள் தரும் பொருள்களைப் பொறுத்தமட்டில், முந்தைய ஐரோப்பா எத்துணை நெருங்கிய தொடர்பு பூண்டிருந்தது என்னும் வேறொரு குறிப்புக்கும் இடந்தருகிறது.

—ஸ்மித்.

## ச. காலத்தின் தட்பவெப்பநிலை

### தட்பவெப்பநிலை செய்த துணை

இந்தியாவின் தட்ப வெப்பநிலை உள்ளத்திற்கு இன்பமும், உடலுக்கு நலமும் பயப்பதில், இவ்வுலகத்து நாற்பெரு நிலப்பிரிவுகளிலேயே நனி சிறந்து விளங்கும் காலநிலையோடு ஒத்ததொன்ருக வைத்து மதிக்கத்தகுவதாகும். ஆங்கு இருபெரும் பொழுதுகளாக ஆண்டு பகுக்கப்படுகிறது. அவ்விரண்டும் ஒன்றனையொன்று ஒழுங்குமுறை பிறழாது தொடர்ந்து வருகின்றன. ஏறக்குறைய ஐப்பசி முதல பங்குனியிருகக், காற்று வடபாலிலிருந்து இடைவிடாமல் வீசும். ஆண்டின் எஞ்சிய காலத்தில் அது தெற்குப் பக்கத்தில் நிலைப்படும். கப்பலோட்டிகள் இவ்விரு நிகழ்ச்சிகட்குப் பருவக் காற்றுகளெனப் பெயர் வழங்குவர். முன்னது சோழமண்டலக் கடற்கரைப் பாங்கரில் சுழல் காற்றை அடுத்தடுத்து உடன் அழைத்து வந்து விடும்.... ...

இடையிடையே சுழல்காற்றைத் தொடர்ந்து தோன்றி விளைநிலத்தை வளம்படுத்த வரையாது பெய்யும் சோனமாரி பெரும்பாலும் மார்கழி இறுதியில்தான் ஓய்வு அடையும்.

வளம்பெருக்கும் பருவக்காற்ருல் விளையும் வெப்பம் நண்பகலில் பொறுத்தற்கரிதாயிருக்கும்; ஆயினும், கடலிடைத் தோன்றும் இளங்காற்ருல் அது மாலைப்போதில் மட்டுப்படும்; இரவில்

துளித்து உடலுக்கு நலம்புரியும் பனிநீர்த்துளிகளால் அது காலைப்போதில் தணிந்துவிடும். பொதுவாக, இந்தியாவில், உதிக்கின்ற ஞாயிறும் படுகின்ற ஞாயிறும் நாடோறும் புலனாகும். ஆண்டிற்கு எட்டுத்திங்களில் வானம் எப்பொழுதும் தூய்மையாகவும் மாசற்றும் விளங்கும்.

—தெலாப்ளோத்.

வடதிசையினும் உயர்ந்த தென்திசை

இந்துஸ்தான் என்னும் பெயர் சிறப்பாகப் பொருந்தப்பெற்ற பகுதிகளில் வாழும் மக்களின் தோல் நிறத்தினும் தென்னாட்டவர் நிறம் மங்கித் தோன்றச் செய்வது, அந்நாட்டை வருத்தும் மிகு வெப்பமாகும். ஆயினும், நிலவளத்தாலும் செல்வப் பெருக்காலும் தென்னாடும் வடநாடும் சற்றேறக்குறைய ஒத்த தன்மையன; எனினும், ஏராளமான கப்பற்றுறைமுகங்களுக்கும், ஐரோப்பிய நாடுகளோடு மிக விரிந்த அளவில் நடைபெறும் வாணிபத்திற்கும் வடநாட்டிலும் தென்னாடே பரந்த புகழ் வாய்ந்துளது.

—அபே துய்யோன்.

காலநிலைப் போக்கும் குமரிமுனைக் காட்சிகளும்

பருவகாலங்கள் ஆட்சி செலுத்தும் நிலத்தினைத் தொடர் மலைகள் எல்லைப்படுத்துகின்றன வென்றும் இயம்பலாம். மேலும், ஒத்த இடையீட்டிலும் மிகக்குறுகிய தொலைவிலும் அமைந்துள்ள நாடுகளிலேயே, குறித்த ஓரேகாலப் பகுதி

யில், வேறுபட்டும் மாறுபட்டும் தோன்றும் காலத் தட்ப வெப்ப நிலைக்கு அத்தொடர்மலைகள் வரை கோலுகின்றன. குமரிமுனை முகட்டில் நிற்கும் ஒரு தமிழ்மகன் தனது வலப்புறத்தே விளங்கும் மாவட்டங்களில் வெங்கதிர் பரப்பி வெய்யோன் காய்வதையும், தனது இடப்புறத்தே உள்ளன வற்றுள் வெள்ளம் பெருக்கெடுத்தோடுமாறு மழை பெய்வதையும் ஒரேகாலத்தில் காண்கிறன். இவ் வண்ணமாகக், கிழ்த்திசையில் வேனிற்காலத்தால் நுகரலாகும் இன்பங்களை ஒருவன் துய்க்கவும், அதே வேளையில், மேற்றிசையில் கூதிர்க்காலமும் கடுவிரைவோடு வீசும் குளிர்வாடையும் அமைதி விழையும் மீகாமனை வெருவியோடச் செய்கின்றன.

—லெகூதேப்ளேக்ச்.

## ரு. முப்பேரரசுகள்

**விலகும் திரைச்சீலை**

கல்வெட்டுக்களால் துலக்கமுறும் தமிழ் அரசர்களின் பெயர் அட்டவணைகளும், அவர்கள் வெற்றி வாகை சூடிய போர் விளக்கங்களும், இயேசு பிறப்பதற்கு மூன்று நூற்றாண்டுகட்கு முன்னரே அசோகர் அரசியற் கட்டளைகளில் காணப்பெறும் தென்னாட்டு அரசுகளைப்பற்றிய குறிப்புக்களும், பண்டைக் காலத்துச் செம்மொழிப் புலவர்கள் தமிழ்நாட்டு நகரங்கள் சிலவற்றின் பெயர்களை எடுத்தாண்டிருப்பதும், நாம் காலத்தொடக்கமாக வகுத்துக் கொண்ட காலப்பகுதிக்கு ஐந்து ஆறு நூற்றாண்டுகட்கு முன்பே தமிழகத்து அரசுகள் நிலவியுள்ளனவாகக் கொள்ளத் துணைபுரிகின்றன........

நமது காலத் தொடக்கத்திற்கு முன்னர்த் தமிழகம் சேர சோழ பாண்டியர் கோலோச்சிய முப்பெரும் நாடுகளாகப் பிரிவுற்றிருந்தது.

—குமஸ்தாவ் லெபோன்.

**திரை விலகினும் குறையகலவில்லை**

வடபுலத்துறையும் தங்கள் ஒன்னலர்—ஆரியருக்கு இணையான கலைப்பயிற்சி உடைய தமிழ் இனத்தவர் வாழிடங்களாய், மக்கள் நெருக்கமும் செழுமைநலமும் பொருந்தியனவாய்த் தென்புறத்துக் கடையிற்றில் அமைந்து பழந்தமிழ் நாடுகள் பிறங்கினவாயினும், வட இந்தியா உள்ளிட்ட ஏனைய நாகரிக உலகோடு தொடர்பொன்றுமின்றித்

தனித்தே நின்றன. இதனால், இவைகளைப்பற்றிய செய்திகள் பிறநாடுகளுக்கு எட்டாமற்போயின. ஆங்கே நிகழ்ச்சிகளை நிரலாகத் தொகுத்து வைப்போர் இல்லாக்குறையால், கி. பி. 900 ஆண்டுகட்கு முற்பட்டுள்ள அந்நாடுகளின் வரலாறுகள் ஒருசில நீங்கலாக, முழுமையுமே அழிய நேர்ந்தது. வியத்தகு விடாமுயற்சியுடைய வடபுலத்து மன்னன் ஒருவன், அரிதாக ஒரொருகால் தடைபுரியும் நெடுங் காட்டை ஊடுருவிச் சென்றாயினும்; அன்றி, அதனைப் புறந்தள்ளி வலம்வந்தாயினும்; தென்னாட்டுத் தார்வேந்தர் தம்மை மறைத்துக்கொண்டிருக்கும் 'தனிமை' என்னும் திரைச்சீலையைச் சிறிது போது விலக்கின், அவ் அமயம்மட்டும், கி. மு. 600 இல் இருந்து கி. பி. 900 ஆண்டுகட்கு இடையேயுள்ள நீண்ட காலப்பகுதியில், தென்புறத்துக் கடையிற்றில் இடம்பெற்ற அரசியல் நிகழ்ச்சிகள் மிகக்குறைந்த அளவில் புலனாகின்றன.

—ஸ்மித்.

அசோகர் காலத்தில் அரசியல்

அசோகர் காலத்தில் தமிழ் இனத்தவர் வாழ்ந்த நிலம் தனித்தனியே நான்கு அரசியல்களாகப் பிரிந்திருந்தன. அவை சோழ, பாண்டிய, கேரளபுத்திர, சத்தியபுத்திர நாடுகளெனப் பெயர்பெறும். உறையூர் அல்லது பழைய திருச்சிராப்பள்ளி, சோழநாட்டின் தலைநகராக விளங்கியது எனக் கொள்ளலாம். பாண்டியநாட்டின் தலைநகரோவெனில்,

திருநெல்வேலி மாவட்டத்தைச் சேர்ந்த கொற்கையே என்பதில் ஐயுறவில்லை. துளுவ நாட்டின் தென்புறத்துள்ள மலையாளக் கடற்கரையேயன்றிச் சேரநாட்டைத் சார்ந்தனவாக இன்று கருதப்படும் உண்ணுட்டு மாவட்டங்களும், கேரளபுத்திர நாட்டுள் அடங்கியிருந்தன. துளுவமொழி பேசப்பெறுவதும், மங்களூரை நடுவிடமாகப் பெற்றதுமான குறுநிலத்திற்கே சத்தியபுத்திரநாடு எனப் பெயர் வழங்கப்பட்டிருத்தல்வேண்டும். முற்கூறிய எல்லா நாடுகளுடனும் அசோகர் எத்தகைய நட்பியைந்த தொடர்பு பூண்டிருந்தனர் என்றால், அவர் தம் சமயநெறிகளை மக்கட்கு எடுத்தியம்ப விரிவுரையாளர்களை ஆங்குத் தம் விருப்பம்போல் அனுப்பவும், பற்பல இடங்களில் புத்தப் பள்ளிகள் எடுப்பித்தற்கும் உரிமை பெற்றிருந்தார்.

—ஸ்மித்.

நெடிது வாழ்ந்தவரின் இறுதி

முப்பெரும் வேந்தர்களாகிய சேர சோழ பாண்டியர் முறையே தமிழகத்து மேற்கும் கிழக்கும் தெற்கும் ஆகிய பகுதிகளைப் பங்கிட்டுக் கொண்டாரெனப் பண்டுதொட்டு வழங்கிவரும் நாட்டுக் கதையை, ஆய்ந்து கண்ட முடிபுக்கு முரணாக வரலாறும் உறுதிப்படுத்துகிறது. கி. மு. 3-ம் நூற்றாண்டின் நண்பகுதியில் அசோகர் விடுத்த விளம்பரங்களில் இம்மூன்று நாடுகளின் பெயர்கள், கேரளா, பண்டா, சோடா என்ற எழுத்துருவங்களில் பொறிக்கப் பெற்றுள்ளன. கி. மு. 302-இல்,

மெகாஸ்தெனஸ் பாண்டியநாட்டினைப் பற்றிக் கூறிப் போந்தார். பின்னை நாளில், கிரேக்க உலக நூலாசிரியர்கள் இம்மூன்று நாடுகளைப்பற்றி நாம் மேற்கண்டவாறு புனைந்துரைப்பர். பாண்டிய மன்னர்களுள் ஒருவர் அகஸ்டஸின் அரசவைக்குத் தமது அயல்நாட்டரசியலேவலாளரை அனுப்பி வைத்த செய்தியை ஸ்ட்ராபோன் (XV-1-4) குறிப்பிடுகிறார். இன்று மலையாள மொழி வழங்கும் நிலம் சேரநாட்டினைச் சேர்ந்திருந்தது. கரூர் சேர நாட்டின் தலைநகராயும், மதுரை பாண்டியநாட்டின் தலைநகராயும், உறையூரும், பின்னர் மலைக்கோட்டமும், இதன்பின்னர்த் தஞ்சையும் சோழநாட்டின் தலைநகராயும் விளங்கின........

ஆராய்ச்சிக்கெட்டிய அளவில், இம்முடி வேந்தர் மூவரும் ஒருவர்மீதொருவர் இடையீடின்றிப் போர் தொடுத்தவண்ணம் காலங்கடத்தினர் என்று கருத இடமுண்டு. சேரநாடு பிளவுற்றுத் தன்னிலையிற் சுருங்கிய பின்பு கொங்குநாடெனப் பெயரேற்றதோடு முதன்முறையாகச் சோழர்களால் வெல்லப்பெற்று, 1080-ல் முடிவாக மைசூர் ஓய்சால வல்லாளர் ஆட்சியுட்புகுந்து ஒன்றுபட்டது. முகமதியப் படையெழுச்சிக்குப்பின், சேர சோழ பாண்டிய நாடுகள் பல்வேறு சிற்றரசுகளாகச் சிதைவுற்றன.

—ழூயீலியேன் வேன்சோன்.

## ௬. பண்டைத்தமிழகத்துத் தலைநகர்கள்

### கொற்கையும் புகாரும்

தாம்பிரபரணியாற்றுக்கு அருகமைந்த கொற்கை, முத்து வாணிபத்திற்கு முதன்மையான விடமாக விளங்கியது. காவிரியாற்றின் கழிமுகத்தின்கண், இடம்பெற்ற புகார் அல்லது காவிரிப்பூம் பட்டினம், ஒருகாலத்தில் செல்வச் சிறப்பும் செழுமை நலமும் வாய்ந்த துறைமுகமாகத் துலங்கியது........

இந்தியாவின் தென்கடையிற்றில் வீற்றிருந்த தமிழ் அரசுகள், சீர்சிறக்க நடைபெற்ற வெளிநாட்டு வாணிபத்தால் விளைந்த பொருள் வளமும், நிலவளமும் பல்கிப் பெருக விளங்கலுற்றதோடு இம்மை நலங்கள் மல்கும் உயர்வாழ்வின் மேன் முகட்டை அவைதலைநகரிலேயே எய்தப்பெற்றன....

சோழர்கள் நிகழ்த்திய நீர்வாணிபத்தில், பருத்தி நூலாடை முதற்பொருளாக மிளிர்ந்தது. இதற்கென இவர்கள் வைத்து நடாத்திய சுறுசுறுப்புள்ள கடற்படை, ஐராவதி கங்கைக் கழிமுகங்கள் மட்டுமேயன்றி மலேயத்தீவுத் தொகுதி வரை பாய் விரித்தேகவும் அஞ்சிற்றில்லை.

—ஸ்மித்.

### வளங்கெழு கொற்கை

பிளினி உயிர் வாழ்ந்த காலத்தில், கி. பி. முதலாம் நூற்றாண்டில், மதுரை அல்லது கூடல் தலைநகராக விளங்கியது. ஆயினும், இன்னும்

முன்னைய நாட்களிலே கொற்கை முதன்மையான அரசிருக்கையாகப் பிறங்கியது என்று நம்புதற்கு இடம் உண்டு. வரலாற்றுக் காலத்திற்கு முன்னர், மதுரைமாவட்டத்தின் கிழக்குக் கடற்கரையில் அமைந்த தென்மணலூர் என்னும் ஓரிடம் பாண்டிய மன்னர்களின் தலைநகராக இருந்ததெனக் கொள்ளுதற்குச் சான்றுளது. கொற்கை அல்லது கொல்கை (கிரேக்கிய மொழியில் காணப்படுவது போல்) மாநகரைத் தமிழர் நாகரிகம் வளர்ந்த தொட்டிலாகவும், சேர சோழ பாண்டிய அரசுகளை நிறுவினோராகக் கருதப்படுபவரும், புராணத் தொடர்புடையருமான உடன் பிறப்பாளரின் பிறப்பகமாகவும் பிறங்கியதெனத் தொன்று தொட்டு வழங்கும் நாட்டு வரலாறுகள் யாவும் குறிப்பிடுகின்றன. திருநெல்வேலியிலே, தாம்பிரபரணி யாற்றங்கரையிலே, இன்று ஏதும் அற்ற சிற்றூராகக் காட்சி நல்கும் அம்மாநகர், தனது ஓங்குபுகழ் உயர்வாழ்வில் திளைத்தொளிர்ந்த நாளிலே சிறந்ததொரு துறைமுகமாகத் துலங்கியதோடு, பாண்டிய அரசர்கள் நலமுற ஈட்டிய பொருட் செல்வத்திற்குத் தனிப்பட்ட வருவாயாக இருந்த முத்துவாணிபத்திற்குத் தலைமைப் பதியாகவும் நிலவியது. மிகுந்த அளவில் வந்துகுவிந்த அரசிறைப் பொருள்களையும், பண்டமாற்று ஊதியங்களையும் கண்காணித்தற் பொருட்டுப் பட்டத்திளவரசர், மதுரையில் அரசவை நிறுவப்பெற்ற காலத்தும், கொற்கையிலேயே தங்கியிருந்தார். கொற்கைமாநகரின் துறைமுகம்

நாளடைவில் மண் மண்டியதால் கப்பல்களை வர வேற்கும் வசதியை இழந்து இங்கிலாந்தின் செய்ங்க் துறைமுகங்களைப் போல் படிப்படியாக அழி வடைந்தது.

கொற்கை, துறைமுகமாகப் பயன்படுவ தொழிந்து கைந்நெகிழ விடப்பெற்றது எந்நாள் தொட்டு என்பதனை வரையறுக்க இயலவில்லையாயி னும், அந்நாட்டு நாணய வெளியீட்டுக் கூடத்தி னின்று வெளிப்போந்துலாவிய காசுகள் ஏறக் குறைய கி. பி. 700-ஆம் ஆண்டிற்கு மேற்பட்டவை யென உணரக்கிடக்கிறது.

—ஸ்மித்.

**கொற்கையின் மறைவும் காயலின் தோற்றமும்**

கொற்கையில் நிகழ்ந்த வாணிபத் தொடர் புடைய வினைகள் அனைத்தும், ஆற்றுக்குக் கிழப் பாலில், மூன்றும் மைலில் அமைந்த காயலில் புதுவதாக நிறுவப்பட்ட துறைமுகத்திற்கு மாற்றப் பெற்றன. காயல் பல நூற்றுண்டுகள் வரைக் கீழ்நாட்டு மாபெரும் வணிகத் தலைமைப் பதிகளுள் ஒன்றுக விளங்கிவந்தது. பதின்மூன்றும் நூற் றுண்டின் பிற்பகுதியில் மார்க்கோபோலோ இங்கே தான் வந்திறங்கினர். அவர் இங்குவந்தமை ஒரு முறை மட்டும் அன்று என்று கோடல் பொருத்த முடையதாகும். முடிமன்னனே யன்றிக் குடிமக் களும் எய்தப் பெற்றிருந்த செல்வச்சிறப்பையும் புறக்கோல மேன்மையையும் வந்தவர் கண்கண்டு

வியந்தார். கொற்கையைப் பாழாக்கிய அதே நிகழ்ச்சி காயல் கைவிடப்பட்டதற்கும் காரணமாக நின்றது.

மீன் பிடித்துப் பிழைக்கும் ஒருசில முகமதியர், கிறித்துவ சமயம் தழுவியோர் வாழும், பாழும் குடிசைகளே காயல் விளங்கிய இடத்தில் இன்று காட்சியளிக்கின்றன.

—ஸ்மித்

**புகாரின் புகழ்பரந்த வாழ்த்து**

காவிரியாற்றின் வடபுறத்துக் கழிமுனை மருங்கே அமைந்திருந்த காவிரிப்பூம்பட்டினம், சோழரின் தலைமைத் துறைமுகமாகத் திகழ்ந்தது. இதன்கண் அழகிற் சிறந்த மாளிகை யொன்றை அரசர் எடுப்பித்துக் காத்துவந்தனர்; மேலும், அயல்நாட்டு வணிகர் இதனை இனிமையும் பயனும் அளிக்கும் உறைவிடமாகக் கருதுவாராயினர். ஒரு கால், செல்வச்சிறப்புடையதாய் மிளிர்ந்த இந்த வளநகர் அழிந்தொழியவும், அவ்விடம் இன்று உயர்ந்த மணற்குவியலின்கீழ்ப் புதைந்து கிடக்கிறது.

— ஸ்மித்

**தொன்மையும் மேன்மையும் வாய்ந்த சென்னை**

சென்னைப்பட்டினம் மிகவும் பழைமையான நகரமாகும். பென்னன்ட் கூறுவதுண்மையாயின், உரோமையர் ஆங்கு அடுத்தடுத்து வருவதும் போவதுமாயிருந்தனர், என்பதை அறியலாம். போஸ்தின் (உரோமைய அரசி. கி. பி. 125-176),

அத்ரியோன் (உரோமைய மன்னர் மன்னன். கி. பி, 117-138), இவர்களின் உருவங்கள் பொறிக்கப் பெற்றனவும், நகரின் சுற்றுப் புறங்களில் காணக் கிடந்தவையுமான சில செம்பொற் காசுகளையும் வெண்பொற் காசுகளையும் இவர் தமது கூற்றுக்குச் சான்றாகக் கொள்ளுகிறார்.

—தெமர்லே

# எ. தமிழர் நாகரிகம்

**வாழ்வினில் உயர்வும் மொழியினில் தூய்மையும்**

ஆரியர் திராவிடரோடு போரிட நேர்ந்த காலத்து, இராமாயணக் காதையின்படி, பின்னவர் ஓர் அளவு நாகரிகமுடையராய்த் திகழ்ந்தனர். உலோகங்களைப் பண்படுத்தவும் ஆடைகள் நெய்ய வும் மட்கலங்கள் வனையவும் அவர்கள் அறிந்திருந்த தோடு, எழுத்துக்கலையிலும் தேர்ச்சியுடையராய் விளங்கினர். அவர்கள் பேசியமொழிகள் வட மொழியுடன் தினைத்துணையும் தொடர்பு இல்லா தவை. சம்ஸ்கிருதம் என்று ஒருமொழியும் இருப்ப தாக வெளியாவதற்கு முன்னரே அம்மொழிகள் மேற்புலத்து அறிஞர் ஆராய்ச்சிக்கு இலக்கா யிருந்தன.

—**குஸ்தாவ் லெபோன்**

**தமிழனின் அன்புள்ளம்**

மிகப்பழைய காலத்தே தமிழ்நாட்டு அரசுகள் தங்கட்கே உரிய நாரிகத்தில் திளைத்தொளிர்ந்தன; மேலும், மேற்புலத்தோடு வளர்ந்தோங்கும் வாணி பம் நிகழ்த்தின. தமிழ்நாட்டினின்று ஏற்றுமதி யாகிய மிக்க பயன்தரும் சரக்குப்பொருள்கள், முத்து, கடல்வன்னக்கல், மிளகு இவைகளாகும். தென்னாட்டி லிருந்தே இந்தியத் தேக்குமரம், மஸ்லின் ஆடை இவையிற்றினைப் பாபிலோனியர் தங்கள் நாட்டிற்கு எடுத்தேகினர் என்பது தெளிவா கிறது. பின்னைநாளில், கிரேக்கிய உரோமைய

பேராட்சிகளின் கீழ் நடுநிலத்துக் கடற்றுறைமுகங்கள் தென்னிந்தியாவுடன் விரிந்த அளவில் வாணிபம் நடாத்திவந்தன. அவண் உரோமைய நாணயங்கள் வழங்கலுற்றன. தமிழ்நாட்டுத் தார் வேந்தர் தம் போர்ப்படைகளில் ஐரோப்பியப் போர் மறவர்களைச் சேர்த்துக் கொண்டனர். உரோமையர் ஆங்கே குடியேறித் தங்கிய உறைவிடங்களின் சுவடுகள் இருத்தல் கூடும்.

—பர்னேட்

எதிர்ப்பையும் எதிர்செல்லுந் தமிழ் நாகரிகம்

தமிழர் நாகரிகம், வடநாட்டு இந்திய ஆரியப் பார்ப்பன நாகரிகத்திற்கு ஒத்த காலத்தது; அன்றேல் அதனினும் பழமையானது என்பதில் ஐயுறவில்லை. தமிழ்நாட்டிலே நெடுநாட்கள்வரை பார்ப்பன நாகரிகம் உறுதியுடன் எதிர்க்கப்பட வேண்டியதாகவும், வரவேற்கப்படாமலே வலிய வந்து நுழைந்த தொன்றாகவும் கருதப்பெற்றது.

—ஸ்மித்

புகழ்மிகு நாகரிகம்

ஆந்திர சேர சோழ அரசுகள் அடங்கிய தீவக் குறையின் நாடுகளுள் நுழையும் முயற்சியில் வெற்றி பெற்ற பார்ப்பனர் ஆங்கே நாகரிகம் நனிவாய்ந்த மக்கட்டொகுதியைக் கண்டனரேயன்றித் திருந்தாத வெறும் முரட்டு இனத்தினர் நிறைந்த குழுவினரைக் காணவில்லை. தமிழரும் வடவரும் சமயத்தாலும் புறவொழுக்க நெறிகளாலும் மிக விரிந்த

அளவில் வேறுபட்டு நின்றனர். தமிழரிடைக் குலப்பாகுபாடு தோன்றவேயில்லை. இந்நிலைமையே இன்றும் உள்ளது; பர்மாவில் மட்டும், பேய்வழி பாடு புரிவது தமிழர் சமயம் எனப் புனைந்துரைக்கப் பட்டது. முதன்முதல் பேய்த் தெய்வங்கள் என்று கூறப்பட்டவையே பின்னர்ப் பார்ப்பனரால் புதுப் பெயரிடப் பெற்று, ஆரியமறை நுதலிய கட வுளரோடும் அக்கடவுளர்தம் துணைவியரோடும் சேர்த்து ஒன்றாக்கிக் கொள்ளப்பெற்றன.

—ஸ்மித்.

சான்று பகருந்தமிழ்

தலைக்காலத்துத் தமிழர்கள் நாகரிகமிலராய், இழிநிலை யெய்தியவராய் வாழ்ந்தனர் என்றியம்ப எத்தகைய குறியும் இல்லை. காட்டகத்துறைந்த வகுப்பினர் நிலைமை எத்தன்மையதாயிருந்திருப்பி னும், திராவிடர்—இப்பெயரிட்டழைப்பதே முறை யாகும்—தம்மிடையே பார்ப்பனர் வந்து குடியே றுவதற்கு முன்னரே, குறைந்த அளவு, நாகரிகத் திற்கு அடிப்படையாயுள்ள பகுதிகளாயினும் அமையப்பெற்றிருந்தனர் என்பதில் ஐயுறவில்லை.

வடமொழியடியாகப் பிறந்த சொற்களை நாம் தமிழ்மொழியினின்று களைந்தெறிந்தோமாயின், எஞ்சிநிற்கும் இயற்றமிழ்ச் சொற்கள் ஆரிய வலை யில்! விழாத தமிழரின் மாசற்ற வாழ்க்கை ஓவி யத்தை உள்ளது உள்ளவாறே தீட்டிக் காட்டும். வடமொழிக் கலப்பினின்று விடுபெறுங் காலைப்

பழந்தமிழ் நிகண்டுகள் விளக்கி யுதவக்கூடும் பண்டைய தமிழர் மனநிலை, ஒழுகலாறுகள், சமயம் இவையிற்றினைப்பற்றிய குறிப்புக்களைமட்டும் தற்பொழுது எடுத்துக்காட்ட விரும்புகிறேன்.

பழங்காலத்துத் தமிழரிடை வழங்கலுற்ற சொற்கள் தரும் சான்றின் துணைகொண்டு நோக்குங்கால், கீழ்வரும் செய்திகள் நமக்கு விளக்கமாகின்றன! இவர்கட்குத் தலைமையாக விளங்கிய "வேந்தர்கள்" "அரண்மனைகளில்" உறைந்து, சிறு "நாடு"களைப் புரந்தார்கள். இவர்களிடை, "பாணர்" என்போர் "விழா"க்களில், "பாக்கள்" இசைத்தனர். இவர்கள் அகர முதலான "எழுத்து"க்களைப் பனையோலைகளில் எழுத்தாணி கொண்டு எழுதியதாகத் தெரிகிறது. இங்ஙனம் வரையப்பெற்ற பனையோலைத் தொகுதியைச் "சுவடி" என்றழைத்தார்கள். தெய்வம் ஒன்றுண்டு என்னும் உண்மையை இவர்கள் ஆய்ந்தறிந் துணர்ந்தார்கள். அம் முழுமுதற்பொருட்கு, இவர்கள் "கோ" அல்லது "இறை" எனப் பெயரிட்டார்கள். இங்ஙனம் உண்மையோடியைந்தவாறு பெயரிடும் முறை ஆரிய மறைவழி நிற்கும் இந்து சமயத்திற்குப் பெரிதும் புறம்பானது. இறைவனைச் சிறப்பித்தற் பொருட்டு ஒரு நெடுமனை எடுப்பித்து இறைவன் உறையுள் என்னும் பொருள் தோன்றுமாறு, "கோ—இல்" எனப் பெயர் சூட்டினார்கள். "நெறி முறைகள்" என்றும், "ஒழுகலாறுகள்" என்றும் இவர்கள் வகுத்திருந்தார்கள். ஆயினும், வழக்கறி

ஞர் என்றோ அன்றி முறைமன்ற நடுவர் என்றோ இவர்களிடை எவரும் இல்லை. மணமுறை வழக்கி லிருந்தது "தங்கம்" "ஈயம்" "துத்தநாகம்" நீங்க லாகப் பழக்கத்திலுள்ள ஏனைய உலோகப் பொருள் களையும்; "புதன்" "சனி" இவையிரண்டும் ஒழிய, முற் காலத்தவர்க்குப் பொதுவாகத் தெரிந்த கோள் களையும் இவர்கள் அறிந்திருந்தார்கள். இவர்கள் "மருத்துவக்கலை"யில் பயிற்சியுடையராய் விளங்கி னார்கள்; "ஊர்"களிலும் "பட்டு"களிலும் உறைந் தார்கள். "சிற்றோடம்" "படகு," மற்றும் 'கப்பல்' (கரையடுத்துச் செல்லும் மேன்மாடங்களமைந்த சிறிய மரக்கலங்கள்)களுங்கூட இவர்கள் வைத் திருந்தார்கள். அந்தக்காலத்தில், கடல்வடிவு நாட் களில், ஒருகால், கால்நடையாகச் சென்றணுகும் சேய்மையிலிலங்கிய இலங்கைக்கண் வாழும் மக்க ளோடன்றிக், கடலுக்கப்பாலுள்ள ஏனைய மக்கள் எவரோடும் இவர்கள் நெருங்கிப் பழகினார்கள் அல்லர். "தீவு" அல்லது "நிலட்பிரிவு" இவற் றினைப்பற்றி நிலநூற்கருத்துக்குத் தோன்றுமாறு தெளிவுறவமைந்த சொற்கள் எழுத்தாட்சியிலில்லை. இவர்கள் "உழவு"த் தொழிலில் மிகுந்த தேர்ச்சி யும், "போரில்" பேர் ஊக்கமும் உடையராய்த் தோன்றினார்கள்; செருக்களத்தில் "வில்" "வேல்" "அம்பு", "வாள்" முதலான படைகளைப் பயன் படுத்துவார்கள். "நூற்றல்," "நெய்தல்" "சாயந் தோய்த்தல்" உள்ளிட்ட பொது அல்லது இன்றி யமையாத வாழ்க்கைக்குரிய வழிவகைகள் கண்டு

பயன்படுத்து வந்தார்கள். "மட்கலம் வனை" வதில் இவர்கள் தலைசிறந்து விளங்கினார்கள் இவர்கள் கட்டுவித்த பிணவறைகள் அதனை விளக்குவன வாகும்.

பார்ப்பனர் வருகைக்கு முன்னர் வாழ்ந்த தமிழர்களின் பொது வாழ்க்கை நிலையைப்பற்றிப் பழைய தமிழ் நிகண்டுகளினின்று எடுத்தாண்ட இச்சுருக்கமான மேற்கோள்கள், நாகரிகத்திற்கு அடிப்படையான பகுதிகள் பற்பல இவர்களிடை நலமுற நிலவின என்பதை உறுதிப்படுத்தப் போது மானவைகளாகும்.

—கால்டுவேல்

*பிறர் தொடர்பு ஏலாமை*

உயர்நிலை மேவும் பண்பினதாய், தமிழர்க்கே சிறப்பாக உரியதாய், வடநாட்டுத் தொடர்பேதும் இலதாய் இலங்கிய நாகரிகத்தினைத் தமிழ்ப்பெரு மக்கள் ஆக்கமுற விளைவேற்றி வந்தனர். வட நாட்டினின்று மதுரைக்கும் வேறு பல நகர்களுக் கும் போந்து புதுவதாக வாழிடம் அமைத்துக் கொண்ட வந்தேறுகுடியினர், குலவொழுக்கச் சமயச் சடங்குகள் சார்புடைய ஆரியக் கருத்துக் களைப் புகலிடத்தே புகுத்த முயன்றனர் ; அதனால், மிகுந்த எதிர்ப்புக்கு ஆளாயினர். மேலும், தென் னாட்டில், பல நூற்றாண்டுகளாக வேறெங்கணும் காணக்கூடாத அத்துணைக் கடுமையாகப் பின் பற்றப்பட்டு வந்த குலமுறை, பின்னர் முற்றுப்

பெருததாகவும் குறைபாடுடையதாகவுமே நிற்க லானது.

—ஸ்மித்

தமிழ்மறை வழிநின்ற நாகரிகம்

கொமார் என்னும் பெயருடைய ஒரு நாட்டினைப்பற்றி மசூதி என்பார் குறிப்பிடுகிறார். அப்பெயர் குமரிமுனை என்னும் சொல்லடியாகப் பிறந்தது என்பது புலனாகிறது. மேலும், தஞ்சைவள நாடும், தீவக்குறையின் தென்கிழக்குப் பகுதி முழுமையும் அந்நாட்டுள் அடங்கியிருந்தனவாகக் கருதலாம். மசூதி கூறும் வரலாறு வருமாறு: "கொமார்நாடு ஒரு தீவு அன்று; அது கடற்கரைகளாலும் மலைகளாலும் அமையப்பெற்ற நாடாகும். இதனைப் பார்க்கினும் மக்கட்பெருக்கம் வாய்ந்த நாடுகள், இந்தியாவிலேயே மிகக்குறைவு......இந்திய மக்களுள், கொமார் நாட்டிடை வாழ்வோர் மட்டுமே கற்புநெறி பிறழாதவராகவும், தீயவொழுக்கங்களினின்று தற்காத்துக்கொள்பவராகவும் விளங்குகின்றனர். மயக்கந்தரும் குடிநீர் வகைகளை அவர்கள் பருகுவதில்லை. இதனைப் பொறுத்தமட்டில், இந்தியருள் பெரும்பாலோர் மேற்கொண்ட ஒழுக்கத்தினின்று இவர்கள் வேறுபட்டிலர்."

—ரேனோ

*

## அ. ஒழுகலாறும் பண்பும்

**தென்னாட்டின் தலையெழுத்து யார் கையில்**

தமிழர் போதிய அளவு மனத்திட்பமும் தாளாண்மையும், உயர்நிலை மேவும் தகுதியும் வாய்ந்தோர் ஆவர். தென்னிந்தியாவைக் கடைத்தேற வைக்கும் முழுப்பொறுப்பும் தமிழரையே சாரலாம்.

—துய்ஸ்தாவ் லெபோன்

**தமிழனின் தெய்வ நீர்மை**

தமிழர்கள் அன்புள்ளவர்கள், நல்லவர்கள்; விருந்தோம்பும் இயல்பினர்கள். பொதுவாக, இவர்கள் மட்டோடு உணவு கொள்பவர்கள். இவர்கள் நீண்டநாள் உயிர்வாழும் ஆற்றல் உடையவர்கள். பழித்தற்குரிய எவ்வகைத்தான ஒழுக்கக் குறைவும் இல்லாதவர்கள்.

—ழுய்லியேன் வென்சோன்

**அடிமைவாழ்வறியான்**

அடிமைவாழ்வு எத்தன்மையது என்றும் அறிந்திலர் பண்டைத்தமிழர். "இந்தியாவில் அடிமையென்று எவருமில்லை. அந்நாட்டு மக்கள் எல்லோரும் கட்டின்றி வாழ்வது ஒரு நிகழ்ச்சியாக விருந்தது," என்றெடுத்தியம்பிய மெகாஸ்தெனஸின் கூற்று, தென்னிந்தியப் பகுதிகளைப் பொறுத்த மட்டில் உண்மையெனக் கொள்ளப்பட்ட செய்தியினைச் சற்றும் ஆராயாது பொதுவாக்கப் பெற்றதனின்று எழுந்ததுபோலும்.

—ஸ்மித்

தன்னிலையழிந்த காரணம்

கருத்தின்மை, முன் எச்சரிக்கையின்மை, தமிழனின் வாழ்க்கை முழுவதையும் இவ்விரண்டே சொற்களில் அடக்கிவிடலாம். தன் மகனது மன்றல் விழாவினைச் சிறப்பாக நடாத்தும்பொருட்டு, மூன்று நான்குமுறை தொகுத்துவைத்த நில விளைவை விலைப்படுத்தி அவன் பெற்ற பொருளனைத்தையும் செலவிடுவான். சிறுவிலைக்காலம் வந்தெய்தின், அவன் கைப்பொருள் யாவும் இழந்து கடன்பட்டு விரைவில் வருவாய் ஏதுமின்றிக் கெட்டழிவான். இத்துயரமான முடிவினின்று தப்பிப் பிழைத்துப் பெற்றிழந்த நன்னிலையை ஏதோ நல்வினைப்பயனாய் அவன் அடைய நேரிடின், முன்னர் நிகழ்த்திய அறிவில்லாச் செயல்களையே அவன் மீண்டும் புரிந்து வருங்கால நலனைப் பாழாக்கிக் கொள்வதை நீங்கள் காண்பீர்கள். அவன் வாழ்நாள் முழுமையும் இதே நிலைமைதான்.

—மெய்ந்த்ரோன்

அன்புவலையிற் படுவோன்

மிகவும் தாழ்ந்த வகுப்பினர் ஈறுகத் தமிழர்கள் அனைவரும் இத்தாலிய நாட்டினரைப் பார்க்கினும் மிகுந்த அறிவு நுட்பமும் திறமையும் உடையவர்கள். ஐரோப்பியர் மட்டில் அவர்கள் மிகுந்த பணிவு காட்டுகின்றனர்; படைவலியும் தலைமை நிலையும் எய்தப்பெற்றிருத்தலால். ஆயினும், அவர்கள் தினைத்துணையும் இகழ்தற்குரிய முறையில் பணிந்தறியார்கள், ஒருவகைத்தான அமைதி

தோய்ந்த மேன்மைப்பண்பு, பணிநெறியிலும் அவர்கள்பால் மிளிர்வதாலென்க. அமைதியோம்பு வதில் விருப்ப மிக்கவர்களாயிருந்தும், ஆங்கிலப் போர் முறைப்படி பயிற்றுவித்த தமிழ்மறவர்களின் அஞ்சாத நெஞ்சமூத்தம் ஆங்கிலேயரையே வியப் புக்குள் ஆழ்த்துகிறது.

—சோல்த்திகோப் இளவரசர்.

## ௬. தமிழரிடை மகளிர் நிலை

மகளிர் சிறப்பு

பாண்டிநாடு 150,000 போர்மறவர்கள் கொண்ட படையினைத் திரட்டும் திறல்பெற்றிருந்தது என்று பிளினி கூறுகிறார். அரசியலமைப்பின்படி அந்நாடு ஓர் அரசியின் ஆட்சிக்கு உட்பட்டிருந்தது என்று அவர் மேலும் குறிப்பிடுகிறார். ஆனால், தனித்த வொரு நிகழ்ச்சியைப் பொதுவழக்கு என இவர் கருதுகிறார் என்பது தேற்றம். இற்றைநாளிலும், கண்ணனூர், மதுரை உள்ளிட்ட சில மாவட்டங்களில் ஓரொருகால் மகளிர் அரசியற்றலைமை ஏற்படுதென்னவோ உண்மைதான். ஆனால், இவர்தம் கொழுநரோ, உடன் பிறந்தாரோ உயிர்நீத்த பின்னரே இவ்வாய்ப்பு நேரிடும்.

—தேமர்லே.

## ௧௦. தமிழர்தம் மறச்செயல்கள்

### போர்சிறந்த தமிழ்மறவர்

அடுத்தடுத்தும், மிகக்கொடுமையான முறையிலும் ஒரு நாட்டவர்களுக்குள் நடைபெற்று வந்த கடும்போர்களைப் பற்றிப் பழைய இலக்கியங்களில் காணப்படும் வரலாறுகள், பண்டைய தமிழ் அரசுகளிடையே அமர்தவிர்த்து அமைதியோம்பும் திறனும், நாட்டுமக்களின் இன்ப நலன்களைப் பேணும் கலையும் அறவே புறக்கணிக்கப் பெற்றிருத்தல் வேண்டும் என்னும் கொள்கையைப் மெய்ப்பிப்பது போல் தோன்றக்கூடும். ஆனால், இங்ஙனம் கருதுவது தவறுடையதாகும். ஏனெனில், செய்யுட்பகுதியும் வேறு பல மென்கலைகளும் மிக மேன்மையான அளவிற்கு ஆக்கமுற வளர்க்கப்பெற்றிருந்தன என்பதில் ஐயுறவில்லை. மேலும், நகரத்து மக்கள் எல்லோரும் எவ்வகைத்தான நிகழ்ச்சிகள் வந்தடுத்த காலத்தும், பொருட்செல்வத்தால் எய்தலாகும் இன்பவாழ்விற்குரிய நுகர்பொருள்கள் யாவையும் துய்த்தனர். இந்நுதலிய பொருள்பற்றி, மற்றும் மெகாஸ்தெனஸின் ஆராய்ச்சிக் குறிப்பொன்று, ஒருபுறம் இடையீடின்றிப் போரும், மற்றொருபுறம் உழுதுண்டு அமைதியாக வாழும் நகரத்து மக்கட்டொகுதியும். ஏராளமாக நடைபெற்றுவந்த வாணிபமுமாக விளங்கலுற்றுப், புறத்தே முரண்படுவனபோற்றோன்றும் இந்நிலைமையை நாம் புரிந்துகொள்ளத் துணை செய்கிறது.

கிரேக்கிய அரசியற்றார் கீழ்வருமாறு குறிப்பிட்டுள்ளார்: இரண்டாம் வகுப்பைச் சார்ந்தவர் பயிர்த்தொழில் செய்வோர் ஆவர். மக்கட்டொகுதியில் இவர்களே பெரும்பான்மையோர்களாக உள்ளவர்கள்; அன்பும் நற்பாங்கும் மிக்குடையவர்கள். போர்ப்பணியாற்றுங் கடப்பாட்டினின்று விடுபெற்ற இவர்கள், அச்சத்தால் கலக்கமுறாது தங்கள் நிலங்களை உழுது பயிரிடுவார்கள். நகரிடை இடம்பெறும் குழப்பங்களில் கலந்துகொள்ள வேனும், அன்றி வேறு எதைக் கருதியேனும் ஆங்கு அவர்கள் என்றைக்கும் போவதில்லை. ஆதலின், ஒத்தகாலத்தில் நாட்டின் ஒரு பகுதியில் மக்கள் பலர் அணிவகுத்து உயிர்க்கஞ்சாது போரிட்டுக்கொண்டிருக்கவும், வேறு பலர், மிக மிக அண்மையில் அப்போர் மறவர்கள் தம்மைக் காத்துதவச் சமைவாயிருப்பதை நம்பிக் கடுகளவும் கவலையின்றி நிலத்தை உழுதும் அகழ்ந்தும் வினையாற்றும் காட்சிகள் அடுத்தடுத்து நிகழ்வதுண்டு.

—ஸ்மித்.

தமிழர் மறம்விளைத்த அறம்

இராசேந்திரசோழ தேவற்கு, பீகார், வங்காள நாடுகளில் கோலோச்சிய மகிபாலனோடும் பகைகொள்ள நேரிட்டது. நேரிடவும், கங்கையாற்றங் கரைக்குத் தன் போர்ப்படையினை உடன்அழைத்துச் சென்முன். இம் மறச்செயலின் நினைவுக் குறியாக அவன் கங்கைகொண்டான் என்னும் பட்டப்பெயர் ஏற்றதோடு, புதுவதாக அரசர்

தலைநகர் ஒன்று எடுப்பித்து அதற்குக் கங்கை கொண்ட சோழபுரம் எனப் பெயர் வழங்கினான். இம் மாநகரின் அண்மைக்கண் அகன்ற செயற்கை ஏரி ஒன்றைத் தோண்டுவித்தான். விரிந்த நிலப் பரப்பு முழுமையும் நீர்பாயப் பெறுவதற்கு இன்றியமையாத மடைமுகங்களும் நீர்க்கால்களும் மிகுதியாக அமையப்பெற்றுப் பதினாறு மைல் அளவு நீண்டு விளங்கியது அந்த ஏரியின் அணை. அழகிற் சிறந்த வோர் அரசமாளிகையும், முப்பது அடி உயரம் வாய்ந்த ஒற்றைக் கருங்கல்லினால் இயன்ற உறுப்பில் வடிவத்தினைத் (பிழம்பு உரு) தன் நடுவகத்தே காத்து, உயரத்தில் உயர்ந்த மாபெருங் கோவில் ஒன்றும் அத் தலைநகரை அணிசெய்தன. இக்காலத்தவருள், பயனீட்டுவதொன்றே பெரிதெனும் கொள்கையினரான ஒருசாரார், கட்டட வேலைக்குரிய மூலப்பொருள்கள் இருக்கும் இடம் தேடிக் கேடுசூழ்ந்தமையால் இரங்கத்தக்க அளவிற்கு உருக்குலைந்து பாழ்பட்ட அக் கட்டடங்கள், திருச்சி மாவட்டத்துள், தனித்த வோரிடத்தில், தனித்த தம் பெருமை தோன்ற இன்றும் நின்று காட்சியளிக்கின்றன. அக் கோவிலில் காணப்படும் கொத்து வேலைகள் இணையற்ற மேம்பாடுடையனவாகும்.

—ஸ்மித்.

புகழ்பேசும் கற்றூண்கள்

இராசராசனின் அரசிளங்கோவும், கங்கை கொண்டான் என்னும் பெயரினனுமான முதலாம்

இராசேந்திர சோழதேவன், புகழ்நாடிப் போர் தொடுக்கும் தன் தந்தையின் ஒழுகலாற்றைத் தொடர்ந்து மேற்கொண்டதோடு அறப்போர் வினையில் மிகுந்த மனவெழுச்சியும் காட்டினன். அவன் எய்திய வெற்றிகளோவெனில், அவன் தந்தை பெற்றவற்றினும் பரந்த புகழ்வாய்ந்தவைகளாகும். அவனது கப்பற்படை வங்காளக் குடாக்கடல் கடந்துசென்று, ப்ரோம் அல்லது பெகு நாட்டின் பழைய தலைநகரான கடாரம் (கிடாரம்), தக்கோலத்தைச் சார்ந்த கடற்றுறைப் பட்டினங்கள், அந்தக் கடற்கரையிலேயே அமைந்த மாத்தாமா அல்லது மர்த்தாபான், இவையிற்றினைத் தாக்கிப் பிடித்து அடிமை கொண்டது. இந்நகரங்களின் வீழ்ச்சி, பெகு அரசு முழுதையும் சோழப் பேரரசோடு தற்காலிகமாக ஒரு சேரப் பிணைத்தற்கு உறுதுணை செய்தது. பெகு நகரில் இன்றளவும் நிலைத்துநிற்கும் இரு கருங்கற்றூண்கள் கி. பி. 1025-27-இல் ஏற்பட்ட வெற்றியின் நினைவாகச், சோழ அரசனால் நாட்டப்பெற்றன என்பர். பெகு நாட்டின்மீது தொடுத்த போரில் நேர்ந்த வெற்றியைத் தொடர்ந்து நிக்கோ பார் (நக்கவரம்) அந்தமான் தீவுகள் இவற்றின் இணைப்பும் நிகழ்ந்தது.

—ஸ்மித்

அன்பு புறவாடும் மறத்தமிழன்

தமிழ்அரசுகளின் வசம் வலிமைமிகுந்த கப்பற்படையிருந்தது. கீழ்நாடுகளினின்றும் மேனாடுகளினின்றும் மரக்கலங்கள் ஆங்குத் தடையேதுமின்றி

வந்து தங்கிப்போகும். செம்பொன் வெண்பொன் கொடுத்தும், மென்கலையாலியன்ற மேனாட்டு விளை பொருள்கள் அளித்தும், முத்து, மிளகு, கடல் வன்னக்கல் இன்னும் பிற இந்திய நாட்டுச் சரக்கு களைப் பெற்றேக மிக விழையும் பல்வேறு இனங் களைச் சேர்ந்த வணிகர்களை அந்த நன்கலங்கள் தாங்கிவரும். ஐரோப்பா நிலப் பிரிவில் ஆங்கில சவரன்கள் இற்றைநாளில் தாராளமாக வழங்கப் பெறுவதைப் போன்றே, உரோமையப் பொன் நாணயங்கள் தென்னிந்தியாவில் வழங்கலாயின. ஒரு பகுதி இறக்குமதியாகியும், பிறிதொரு பகுதி மதுரையில் அடித்து வெளியிடப்பட்டும் வந்துள்ள உரோமைய வெண்கலச் சில்லரைக் காசுகள், பொதுவாக நாள் அங்காடிகளில் நடமாடி வந்தன. நமது காலத்தொடக்கத்தின் முதல் இரண்டு நூற் றுண்டுகளில், வாணிபத்துறையில் ஈடுபட்ட உரோ மையநாட்டு மக்கள் திரளாகத் தமிழ்நாடு போந்து வாழிடம் அமைத்துக்கொண்டனர் என்று கருது தற்குத் தகுந்த சான்று உளது. மற்றும், "அடல் வாள்யவனர், மூவகை மிலேச்சர், முற்றும் உருக்கு மெய்யுரை பூண்டோர்" என்றெல்லாம் புனைந் துரைக்கப்பெற்ற ஐரோப்பியப் போர்மறவர்கள், தமிழ் அரசர்களின் மெய்காவலர்களாகப் பணியாற் றினர். அதுகாலை, யவனர் தந்த வினைமாண் நன் கலங்கள் பொன்னொடு முசிறி (கரங்கனூர்) வந்து கறியொடு (மிளகு) பெயராநிற்கும். அகஸ்டஸுக் கென எடுப்பித்த கோயில் ஒன்று முசிறியில் இருந்த

தாகவும் எடுத்தியம்பப் பெற்றுள்ளது. இக்கூற்று உண்மையுடையதே என்பதில் ஐயம் இல்லை. கிழக்குக் கடற்கரையிலே, காவிரியாற்றின் வடகிளை கடலொடு கலக்கும் இடத்தில் அமைந்த தொழிற் செறிவுள்ள துறைமுகமாகிய காவிரிப்பட்டினம் அல்லது புகாரில் பிறிதொரு உறைவிடம் வகுத்துக் கொண்டனர், அயல்நாட்டு வந்தேறு குடியினர். நெடுங்காலத்திற்கு முன்னர் மறைந்தொழிந்த அந் நகரும், நகரின் துறைமுகமும், இன்று பரந்த மணல் மேட்டின்கீழ்ப் புதையுண்டு கிடக்கின்றன. யவன நாட்டு முந்திரிச்சாற்று வகைகள், விளக்குகள், ஏனங்கள் இவைகளின் இறக்குமதியைப்பற்றிச் செய்யுள்கள் (காப்பியங்கள்) பரக்கக் கூறுகின்றன. மூன்று கருங்கற்பாறைகளால் இணைத்துக் கட்டப் படும் பழங்காலக் கட்டட முறையில் அமைந்த நீலகிரிக் கல்லறைகளில், கிறித்துவக்காலத் தொடக் கத்தில் ஐரோப்பாவில் இயற்றப்பெற்றனவற்றை யொத்த வெண்கல ஏனங்கள் ஏராளமாகக் காணக் கிடந்தமையும், செங்கடற்செலவில் எடுத்தோதப் பெற்ற விளக்கவுரைகளும் அச்செய்யுட்கள் பகரும் சான்றினை உறுதிப்படுத்துகின்றன.

—ஸ்மித்

*நாற்புறமும் சென்ற நாவாய்கள்*

தமிழரது நாவாய்கள் கங்கை ஐராவதிக் கழி முகங்கள் வரையேயன்றி, இந்துமா கடலிலுள்ள மலேயத்தீவு நிறைகடலின் தீவுகள் வரையும் துணி வுடன் சென்று மீண்டன. எகுபதி நாட்டினின்று

கேரளம் அல்லது மலையாளத்தில் இறக்குமதி செய்யப்பெற்ற பலதிறப்பட்ட சரக்குப் பொருள்கள் சோழநாட்டிடையே எளிதின் விற்பனையாயின. இதே வேளையில், மற்றொருபுறம், பருத்திப் பஞ்சு விரிந்த அளவில் விளைவாகிவந்த கிழக்குக் கடற்கரையில் உள்ள வாணிபக் கூடங்களினின்று வெளிப்போந்த சரக்குப் பொருள்களுள் ஒரு பெரும் பகுதி மேலைநாட்டுத் துறைமுகங்களை நோக்கி விரைந்தன.

—ஸ்மித்.

உலகறிந்த வாணிபம்

நமது வரலாற்று நூலிலே பிழையாத பகுதியெனக் கருதப்பெறும் பண்டை வரலாறு அலெக்சாண்டர் படையெடுப்புக் காலந்தொடங்கி மட்டுமே இந்தியாவைப்பற்றிய திருத்தமான செய்திகளைத் தொகுத்துத் தருகின்றதேனும், சற்றும் எண்ணில் அடங்காத மிகப் பழைய காலந்தொட்டு இந்தியர் சிறப்புற்று விளங்கினர் என்பதை எவரும் மறுக்கத் துணியார். அதன் புறத்தோற்றங்கள், அந்நிலப் பிரிவில் உறையும் மக்களின் ஒழுகலாறுகள், அவர்கள் புனைந்தியற்றிய பருத்தி நூலாடைகளின் மேன்மை இவையிற்றினை அலெக்சாண்டருக்கு நூற்றுப் பதின்மூன்று ஆண்டுகட்கு முன்னரே எரோதோத் என்பார் இயன்ற அளவு செம்மையாக எடுத்தியம்பியுள்ளார். எரோதோத் வாழ்ந்த நூற்றாண்டிற்குச் சற்றேறக்குறைய அறுநூறு ஆண்டுகட்கு முன்பே இந்தியாவுடன் சிறப்பான

வகையில் நடைபெற்ற வாணிபத்தைப்பற்றிய செய்திகளைத் தீரியர் (பெனிசிய நாட்டினர்) எகுபதியரிடம் கேட்டறிவதையும், இவர்களுடன் சேர்ந்து அடுத்தடுத்துச் செங்கடற் செலவு மேற் கொள்ளுவதையும் காண்கிறோம்.

—லெகூதேப்ளேக்க்.

பண்டைக்காலக் குடகடல் துறைமுகங்கள்

இந்தியாவின் மேற்குக் கடற்கரையில் அமைந் துள்ள சில பட்டினங்களுக்கு எகுபதியரும் தீரிய ரும் உரோமையரும் அடிக்கடி வருவதும் போவது மாக விருந்தனர். செங்கடல், பெர்சியக் குடாக்கடல் ஆகிய இருவழிகளாலும் நடைபெற்ற வாணிபத் திற்குச் சரக்குச் சாலைகளாக விளங்கின அப் பட்டி னங்கள். பிளினியும் டாலமியும் தரும் சான்று களின்படி, திண்டி (தொண்டி) என்றும், முசிறி என்றும், பராஸ் அல்லது பெக்காரே (வைகரை) என்றும் அந்நகர்கள் பெயர்பெறும். இவற்றினை நோக்கிக் கொத்தொனரா (கோட்டயம்?)வினின் றும், மெல்சிந்தா அல்லது நெல்சிந்தாவினின்றும் மிளகு மூட்டைகள் ஏற்றிச்செல்லப்பட்டன. இன்று, இந்நகர்களின் இருப்பிடங்கள் இன்னவை என்று உறுதியாக அறுதியிட்டுக் கூறுவது அரிய தாயினும், கடற்கரைப் பாங்கரிலே, கோவாவிற்கும் தலைச்சேரிக்கும் இடையே அவைகள் இடம்பெற் றிருத்தல் வேண்டும் என்று தெளிதற்குப் பல நுண்ணிய ஏதுக்கள் உள்ளன.

—லெகூதேப்ளேக்க்.

வந்து குவிந்தது பொன்

கடல்வழிகள் கடத்தற்கு எளிதாகிய அளவில் வாணிபம் எத்துணைப் பெருக்கம் அடைந்ததென்றால், பிளினி கூற்றின்படி, உரோமையர் மட்டும் ஐந்நூறு நூறாயிரம் (5 கோடி) உரோமையச் சில்லறை வெண்பொற் காசுகளுக்கு (37,50,000 ரூபா) நேரான தங்கப் பாளங்களையும் வெள்ளிப் பாளங்களையும் இந்தியாவில் இறக்குமதி செய்தனர். ஆனால், உரோமைய ஆட்சி உலகெங்கணும் பரவுதற்கு முன்னரும் பின்னரும் ஐரோப்பாவினின்றும், ஆப்பிரிக்காவினின்றும், ஆசியாவின் ஒரு பகுதியினின்றும் ஆங்கு ஏராளமாகக் கொண்டு குவித்த பொன்னும் வெள்ளியும் எவ்வளவு என்று கணக்கிட்டு எவரே கூறவல்லார்!

—தேமரிலே.

எகுபதிய நாட்டின் தொடர்பு

(எகுபதி கி. மு. 31-ல் உரோமைய ஆட்சிக் குட்பட்ட பின்னருங்கூட) இந்தியாவின் நீர் வாணிபம் வியக்கத்தக்க முறையில் பெருக்கமுற்றிருந்தது. கடந்த பன்னூற்றாண்டுகளினும், வாணிபத் துறையில், கற்பனைக்கும் எட்டாத அளவு உச்ச நிலை எய்திய இந்த நூற்றாண்டில்கூட, இப் பெருக்கத்தைக் கண்டு அயிர்ப்புத் தோன்றும்............

உரோமாபுரி இடையீடின்றிக் கேட்டுக் கொண்டேயிருந்த இந்திய நாட்டுச் சரக்குகளைச் சோராது கொடுக்கும்பொருட்டு எகுபதிய வணிகரும், சிரிய நாட்டு வணிகரும் பேரூக்கங் காட்டிப்

போட்டியிடுவாராயினர். அதுகாலை, (பிளினி குறிப்பதுபோல்) பொருளீட்டும் பேராவல் இந்திய நாட்டை எஞ்சிய உலகோடு பிணைக்கலுற்றது........

உரோமைய பேராட்சியோடு எகுபதி இணைக்கப்பெற்றுச் சற்றேறக்குறைய எண்பது ஆண்டுகள் சென்ற பின்பு, இந்திய நீர்வாணிகத்தில் ஈடுபட்டிருந்த மரக்கலம் ஒன்றின் மீகாமன் இப்பாலஸ் என்பான், இன்று மலையாளக் கடற்கரை என்று அழைக்கப்பெறும் பகுதியிலுள்ள முசிறி நோக்கி மரக்கலத்தைச் செலுத்தினான்...........

தமிழகம் பேரும் புகழும் பெருவாழ்வும் பெற்றுப் பொலிந்த நாளிலே, அதற்கும் எகுபதிக்கும் நடைபெற்றுவந்த வாணிபத்திற்குத் தலைமைச் சரக்குச்சாலைகளாக இவ்விரு துறைமுகங்களும் விளங்கினமையால், ஈண்டுப் பண்டைய மக்கள் சிறப்பாக உரோமையர் தமிழகத்தோடு எவ்வகைத் தான வாணிபம் நிகழ்த்தினர் என்பதை ஆராய்தற்குரிய அமயம் என்றெண்ணுகிறேன்.

—ராபர்ட்சன்.

புலிபொறித்துச் சென்ற முப்பெரும் பொருள்கள்

இந்தியாவினின்று ஏற்றுமதி செய்யப்பெற்ற முப்பெரும் பொருள்களாவன: 1. மளிகைச் சரக்குகளும் நறுமணப் பொருள்களும், 2. அருமா மணிகளும் வெண்முத்தும், 3. பட்டும் பட்டாடைகளும். இப் பொருள்களைப்பற்றிச் சில குறிப்புக்கள் தருகிறேன்.

### 1. மளிகைச் சரக்குகளும் நறுமணப் பொருள்களும்

உரோமையர் புரிந்த பூசனை வழிபாட்டின் போது செலவழித்த சாம்பிராணியும், வேறு பிற நறுமணப் பொருள்களும் மிகப் பெரிய அளவினவாக இருத்தல் வேண்டும். ஆயினும், கடவுட்பற்றைவிட மக்கள்தம் செருக்கே மணங்கமழும் பொருள்களின் ஏராளச் செலவிற்குக் காரணமாயிருந்தது. இறந்தோரைத் தீயிலிடுதல் உரோமையரிடை வழக்கிலிருந்தது. இதனைச் சிறப்புறச் செய்தற்பொருட்டு விலையேறிய நறுமணப் பொருள்களைக்கொண்டு பிணத்தின்மீதும் விறகுக் குவியலின்மீதும் குறைவறப் பெய்தல் இன்றியமையாததாயிற்று. சில்லா என்பாருக்கு நிகழ்த்திய பிணச் சடங்கின்போது விறகுப் பரப்பின்மீது 210 மூட்டை நறுமணப் பொருள்களைப் பெய்தனராம். போப்பே பேரரசிக்கு மிகுந்த ஆர்ப்பாட்டத்தோடு நடைபெற்ற பிணச்சடங்கின்போது எரித்த கருவாப்பட்டையும் கிராம்பும் எவ்வளவென்றால், அப் பொருள்களைத் தோற்றுவித்த இடங்கள் யாவும் சேர்ந்து ஓர் ஆண்டில் தரும் விளைவைப் பார்க்கினும் மேம்பட்டதாகும்.........

### 2. அருமாமணிகளும் முத்தும்

............இன்ப நுகர்ச்சிக்குரிய பொருள்கள் அனைத்துள்ளும் முத்துக்களையே உரோமையர் பெரிதும் விரும்பினர் எனத் தோன்றுகிறது. எல்லா வகுப்பினர்களும் அவற்றை வாங்க விரைந்

தனர். ஆடைவகைகளில் முத்துக்கள் புனையப் பெறாத பகுதிகளே இல்லை என்னலாம்........

ப்ருய்த்தீஸ் என்பானின் தாயாகிய செர்விலி என்னும் பெயரினளுக்கு ஜூய்ல் செஜார் கொடையாக அளித்த ஒரு முத்தின் விலை 48,457 சவரன்கள் ஆகும். க்ளேயோ பாத்ரா அரசியின் செவிகளை அணிசெய்த அந்தப் புகழ்வாய்ந்த முத்துக்களின் விலை 1,61,458 சவரன்கள் ஆகும்.

3. பட்டுப் பட்டாடைகள்

உரோமாபுரியினரால் மிகவும் விரும்பப்பெற்ற இந்திய நாட்டுப் பிறிதொரு பொருள் பட்டு ஆகும்........

பட்டின் விலை வரம்புகடந்து நின்றது. இதனாலேயே, பட்டாடை மிகவும் விலையேறியதாகவும்; ஆடவர் அணிதற்குத் தகுதியில்லாத அத்துணை மென்மை வாய்ந்ததாகவும் கருதப்பட்டதோடு, உயர்வகுப்பைச் சேர்ந்த செல்வப் பெண்டிரால் மட்டுமே வாங்கி அணியப்பெறும் நிலையில் விளங்கியது. இவ்வாறிருந்தும், பட்டு வாங்குவதில் யாவரும் கண்ணுங்கருத்துமா யிருந்தனர்; சிறப்பாக, ஒழுக்கங்கெட்ட எலியோகபால் என்பவன் ஆடவரிடையேயும் பட்டணியும் வழக்கத்தை நுழைத்த நாளிலிருந்தே மக்கள் மிகுந்த மன வெழுச்சி கொண்டனர். பெண்இயலுக்கு ஒத்த பட்டாடையை ஆடவர் உடுத்து மானங்கெட்டு

வாழவும் துணிந்தனர்; பட்டணிதல், பழங்காலத்து ஒழுக்கநெறிக்கு முரண்பட்டதாதலின். உரோமையர் பட்டினைப் பயன்படுத்தும் வகையறிந்த நாளிலிருந்து 250-ஆண்டுகள் வரைப், பட்டின் விலை சிறிதாயினும் ஏற்றத் தாழ்வின்றித் தோன்றியது. வேந்தர்வேந்தன் ஒரேலியன் ஆட்சிக்காலத்தும் பொன்னெடை கொடுத்து வாங்கும் நிலையிலேயே பிறங்கியது பட்டின் விலை.

—ராபர்ட்சன்.

முசிறியும் தமிழர் வாணிபமும்

மேற்குக் கடற்கரையில் அமைந்த மிகப்பெரிய வாணிப இடங்களுள் இரண்டாவதாகக் கருதப் பெற்ற முசிறியில் இறக்குமதி செய்யப்பட்ட சரக்குகளுக்கும் நருமதையாற்றின் தென்கரையில் அமைந்த பர்கஜா (ப்ரோட்ச்)வில் இறக்குமதி செய்யப்பட்ட சரக்குகளுக்கும் பெரும்பாலும் வேற்றுமையேயில்லை. இறக்குமதி செய்யப்பட்ட பொருள்கள் கீழ்வருமாறு: இத்தாலிய யவன அரபு நாடுகளின் கொடிமுந்திரிப் பழச்சாறு, செம்பு, வெள்ளீயம், ஈயம் புதுமையாகப் பின்னப் பெற்ற இடைக்கச்சுக்கள், மேலிலோ என்னும் புற்கள், வெண்பளிங்குகள், குதிரைப் பல்லுருவ நச்சுக்கல், காரீயம், செம்பொன்; வெண்பொன் நாணயங்கள் ஆகும். முசிறி, இந்தியாவின் கிழக்குப் பகுதிகளுக்கு மிகவும் அண்மையிலுள்ளதாலும், அப்பகுதிகளோடு அத்துறைமுகம் விரிந்த அளவில் தொடர்பு

கொண்டிருந்ததாகத் தெரிவதாலும், ஆங்கிருந்து ஏற்றுமதி செய்த பொருள்கள் பிறவிடங்களினும் பெருக்க மிக்குடையனவாகவும், மிகுந்த அருமை யுடையனவாகவும் இருந்தன. காண்டற்கரிய அழகு வாய்ந்த முத்துக்கள், கட்டுக்கட்டாகப் பட்டாடை கள், உயர்ந்த நறுமணப் பொருள்கள், ஆமை யோடுகள், ஒளியூடுருவும் பளிங்குக்கற்கள், சிறப் பாக ஒளிர்மணிக்கற்கள் (வைரம்), ஆய்ந்தெடுத்த மிளகு மூட்டைகள் பெருவாரியாக ஏற்றுமதி செய் யப்பட்டன என்று செங்கடற் செலவின் ஆசிரியர் இயம்புகின்றார்........

குமரிமுனையருகே முவ்வேறு துறைமுகங்களை அவ்வாசிரியர் குறிப்பிடுகின்றார். அம் மூன்றும் தீவக்குறையின் கிழக்குக் கடற்கரையில் அதாவது இன்று கொரமாண்டல் கடற்கரையென்று அழைக் கப்பெறும் பகுதியில் அமைந்திருந்தனவாகத் தெரி கிறது. அவை வாணிப இடங்களாகவோ சரக்குச் சாலைகளாகவோ விளங்கி யிருத்தல் வேண்டும் என்று கருதுகிறார்.........

சோழமண்டலக் கடற்கரையில் வாழ்ந்த மக் கள் தங்கள் சொந்த மரக்கலங்களைக் கொண்டே மலையாள மக்களோடு வாணிபம் நடாத்தினர் என்றும்; பரிகஜா (ப்ரோட்ச்)வின் உண்ணாட்டு வாணிபம் விரிந்த அளவுடையது என்றும்; முசிறித் துறைமுகத்தில் எல்லாப் பருவக்காலங்களிலும் அந்நாட்டு மரக்கலங்களைத் திரள்திரளாகக் காண

லாம் என்றும் செங்கடற் செலவின் ஆசிரியர் நமக்கு அறிவிக்கின்றார். தாப்ரோபான் (இலங்கையைத் தாம்பிரபரணி என்றும் 2000-ஆண்டுகட்கு முன்னர் அழைத்தனர் போலும்) நாட்டின் அரிய விலை பொருள்களை இந்தியாவின் பல்வேறு வாணிப இடங்களுக்கெல்லாம் ஏற்றிச்சென்றனர் என்பதை ஸ்ட்ராபோன் வரைந்தளித்த உலக நூலில் காண் கிறோம்.

இவ் வண்ணமாக, கீழ்நாடுகள் நோக்கிச் சென்று மீள்வதற்குக் கட்டாயமாகத் தேவைப் படும் கால அளவைவிட மிகக் குறைந்த காலப் பகுதியில் அதாவது ஒரே ஆண்டில்,* எகுபதி நாட்டுத் தொழிற்கூடத் தலைமையாளர்கள் விரும் பிய பொருள்களைத் தேடித் தொகுத்துப் பய ணத்தை முடித்துக்கொள்ளுதல் இயலுவதொன்றா யிருந்தது.

—ராபர்ட்சன்.

பட்டுக் காய்க்கும் மரம்!

பட்டு யாண்டிருந்து வருகிறதென்றும். அது எங்ஙனம் உண்டாகிறதென்றும் உரோமையர் அறி யாமலிருந்தனர். அது ஒருவகைப் பஞ்சு என்றும், ஏதோ ஒருசில மரங்களில் படைப்பு முறை

---

* அலெக்சாண்ட்ரியாவினின்று முசிறிக்குப் போதற்கு 94 நாட்கள் செல்லும் என்று பிளினி கூறுவதைக்கொண்டு, சென்று மீள்வதற்கு: $94 \times 2 = 188$ நாட்களாகலாம். எஞ்சிய ஐந்து ஆறு திங்கள்வரை மேனாட்டு மரக்கலங்கள் முசிறித் துறைமுகத்தில் தங்கினவாகக் கருதலாம்.

தோற்றுவித்த ஓர் இளஞ்சிறகு என்றும் அவர்கள் நெடுங்காலம்வரை எண்ணியிருந்தனர்.........முசிறி யில் முத்தும் அருமாமணிகளும் மிக எளிதாக அகப்பட்டன. முத்து வாணிபம் இன்றைக்கும் முதன்மைபெற்றே விளங்குகிறது. கீழ்நாட்டினரே யன்றி ஐரோப்பியருங்கூட முத்துக்களித்த மதிப்பே இதற்குக் காரணம். ஒரு முத்துமட்டும் ரூபா மூவாயிரம் விலைபோதல் அரிதாக நிகழ்வதன்று.

—தெமர்லே.

ஐதர் அலி அணிந்த முத்து

ஐதர் அலியின் தலைப்பாகையை அழகு செய்த இரட்டை முத்துமாலைகளில் உள்ள எழுபத்தெட்டு முத்துக்களின் மொத்த விலை 6,10,000 பிராங்குகள் அதாவது சற்றேறக்குறைய 2,28,950 ரூபா ஆகும் என்று லெகூதெப்ளேக்ச் என்பார் கூறுகிறார். வங்காள வளநாட்டுக் காவலாயிருந்த ஆஸ்டிங் துரைமகனாரின் மனைவியார் 1784-இல் ஐரோப்பா மீண்டபோது அம்முத்துக்களில் சிலவற்றை ஆங் கிலநாட்டு அரசிக்கு அளிப்பதற்கென உடன் எடுத் தேகினார்.

—தெமர்லே.

எகுபதியரோடு வாணிபம் நடத்தின இருதிக்காலம்

பாண்டிய மன்னர் கி. மு. 20-ல் அகஸ்டஸ் அரசரிடம் தூதுவிடுத்ததாக அறிகிறோம்; மேலும் செங்கடற் செலவின் ஆசிரியரும் (கி. பி. 80) உலக

நூல்வல்லுநர் டாலமியும் (கி. பி. 140), பாண்டிய நாட்டுத் துறைமுகங்களும், சந்தைகளும் எங்கெங்கு இடம் பெற்றிருந்தன, அவ்விடங்களின் பெயர்கள் யாவை என்றிவைபற்றிய செய்திகளை நன்கு அறிந்திருந்தனர். கி. பி. 215-இல் அலெக்சாண்ட்ரியாவில், காரக்கல்லா என்னுங் கொடுங்கோலன் நிகழ்த்திய படுகொலை, தென்னிந்தியாவிற்கும் எகுபதிக்கும் நேர்முகமாக நடைபெற்ற வாணிபத்திற்குத் தடையேற்படுத்தியது. அல்லது அதற்கு ஒரு முடிவு கண்டிருத்தல்கூடும், இந்த நிகழ்ச்சியினால், பாண்டியநாட்டு வரலாற்றின் ஒரு பெரும் பகுதி நாம் அறிவதற்கின்றி மறைந்தது.

—ஸ்மித்.

கலதேய நாட்டுடன் தொடர்பு

கி, மு. 3000 ஆண்டிற்கு முற்பட்ட காலத்தில் ஒன்றித்த பபிலோனியாவில் கோலோச்சிய ஊர்-ஏயா அல்லது ஊர் பகாஷ் என்னும் பெயர்வாய்ந்த வேந்தர் கல்தேயத்தில் எடுப்பித்த பழைய ஊராக விளங்கிப் பின்னர் இடிந்து பாழடைந்த முய்கேர் பகுதியில் இந்திய தேக்கமரத்துண்டு ஒன்று அகப்பட்டது. திராவிட நாட்டிற்கும் கல்தேயத்திற்கும் உள்ள வாணிப உறவை உறுதிப்படுத்த இஃது அரியதொரு சான்றாகும், ஏனெனின், ஓரொரு கால் வந்தடுப்பதுபோல், வேறெங்கணும் காண்டற்கரிய இம்மரம் திட்டமாக வரையறுக்கப்பட்ட ஓர் இடத்திற்கே உரியதாகிறது. தென்னிந்தியாவிலே

(தக்கணம்) மலையாளக் கடற்கரைக் கண்மையில் செழிப்பாக வளரும் இம்மரம் மற்றெவ்விடத்தும் தென்படாது. விந்தியத்திற்கு வடபாலில் எனிலோ, அம்மரம் ஒன்றையேனும் பார்த்தற்கியலாது.

—ரகோசின்.

சீனரோடு தமிழர் தொடர்பு

பண்டு தொட்டே சீனர் இந்தியரோடு உறவு பூண்டிருந்தனர் என்பதை உறுதிப்படுத்தும் அடையாளங்கள் இன்னும் சோழமண்டலக் கடற்கரையில் தென்படுகின்றன. முற்காலத்திலே, தஞ்சை வளநாட்டிலே, நாகப்பட்டினத்திற்குத் தென்புறத்தே அமைந்த நாகூர், சீனர்களின் வாணிப இடமாக விளங்கியது; மற்றும், அவ்வணிக மக்கள் தங்கள் நாட்டு கற்றச்சு நூல் நுதலியவாறு கோவிலொன்றும் ஆங்கே எடுப்பித்தார்கள். அச் சிறந்த கட்டடம் இன்றளவும் பழுதின்றித் தோன்றுகிறது. ஆண்டுதோறும் பத்துப் பன்னிரண்டு சீனநாட்டுப் பாய்கட்டிக்கப்பல்கள் பல வகைச் சரக்குப்பொருள்களையும், சீனரியற்றிய கைவினைப் பொருள்களையும் ஏற்றிக்கொண்டு சோழமண்டலக் கடற்கரையை வந்தடையும். வங்கத்து வெடியுப்பு, பட்டு, அரக்கு, வெண்காரம், மெல்லிய பூந்துகில்கள், விரைபொருள்கள், நீலம் இவையிற்றினை அக்கலங்கள் சீனத்திற்கு மீளுங்காலை ஏற்றிச்செல்லும்.

—கோலன் தேபார்.

**சீனவாணிபம் மங்கியதேன்?**

சீனர் எப்பொழுதுமே இந்தியரோடு வாணிபம் புரிந்துவந்தனர். இவ்விரு நாட்டு மக்களும் ஒத்த மனச்சார்பும், பண்பும், வாழ்க்கையமைப்பு முறைகளும் உடையவர்கள். இவ்வொப்புமைகள் இவர்களது வாணிபக் கூட்டுறவுகட்குத் துணையே புரிவன. முன்னைநாளிலே, தஞ்சையைச் சார்ந்த நாகப்பட்டினத்திற்கு ஐந்து நாழிகைத் தொலைவில் கோவிலொன்றும் வாணிபம் நடத்துமிட மொன்றும் இவர்கட்குச் சொந்தமாக விருந்தன. இவ்விருப்பிடத்தினின்று இவர்களை மொகாலியர் வலியின் அப்புறப்படுத்தினர். இதனால், நாட்டுக்கு நேர்ந்த விளைவுகள் வருந்துதற்குரியன. பத்துப்பன்னிரண்டு சீன நாட்டுப் பாய்கட்டிக்கப்பல்கள் ஆண்டுதோறும் காண்ட்டன் பட்டினத்துச்சரக்குப் பொருள்களைச் சுமந்து வந்து இறக்குமதி செய்வதும்; இதுவேயுமன்றிச், சற்றேறக்குறைய நான்கு இலட்ச ரூபாவும் கொடுத்து, இவற்றினுக்கீடாகக், கைபுனைந்தியற்றிய விலைப்பொருள்களைப் பெற்றேகுவதும் வழக்கம். இவ்வாணிபம் சோழமண்டலக் கடற்கரைப்பகுதியின் செல்வநிலையை மிகவும் உயர்த்தியது. இற்றை நாளில், ஐரோப்பியர் மூலமாகவே சீன நாட்டுச் சரக்குப்பொருள்கள் இந்தியருக்குக் கிடைக்கின்றன.

— தேமரிலே.

பெனிசியர் வாணிபம்

பெனிசியர் வாணிபத் தொடர்பு பூண்ட பல் வேறு பிரிவுகளுள் இந்திய வாணிபம் தலைசிறந்த தொன்றாகவும், மிகுந்த ஊதியம் பயப்ப தொன்றா கவும் விளங்கியது. நடுநிலத்துக் கடற்புறத்தே இவர்கட்கு வாழிடமாக வாய்த்த நிலப்பகுதியின் அமைப்பும்; கலஞ் செலுத்தும் கலையின் முற்றாப் பெறாத நிலையும், கடல்வழியாக இந்தியாவுடன் நேரிய தொடர்பு ஏற்படுத்திக் கொள்ளுதற்குத் தடைகளாய் நின்றமையை யுணர்ந்து இவர்கள் பெர்சியக்குடாவில் தகுதியுற வமைந்த சில துறை முகங்களை யூதேயரிடமிருந்து பறிக்கத் தலைப்பட் டனர். புதுவதாக ஏற்படுத்திக் கொண்ட இடங் களினின்று அவர்கள் இந்தியாவோடு இடையறாத வாணிபம் நிகழ்த்துவா ராயினர்........பெர்சியக் குடாவிற்கு அண்மையிலுள்ளதும், நடுநிலத்துக் கடற்கரையி லமைந்ததுமாகிய ரினோக்கொலிர்த் துறைமுகத்தைப் பெனிசியர் கைப்பற்றியதால், பண்டைக்காலத்து மக்கள் எவராலும் இயன்றி ராத முறையில் பெரிதும் விரிந்த அளவிலும் மிகவும் குறைந்த விலைக்கும் இந்தியாவின் விளை பொருள்களை வாங்கிப் பிறநாடுகளுக்குத் தருவது எளிதாக விருந்தது. இதன் விளைவாகவே, பன் னெடுங்காலம் வரை, இந்தியச் சரக்குப் பொருள் களை விலைப்படுத்தும் தனியுரிமை இவர்கட்கு நிலை பேறாக வாய்த்தது. இவ்வாணிபம் தனிப்பட் டோரின் அளவுகடந்த செல்வத்திற்குக் காரண

மாயிருந்தது; "தீரிய நாட்டு மாபெரும் வணிகர்களை மன்னர்களாகவும், செட்டிமக்களை இந்நிலவுலகத்தே மதித்தற்குரியராகவும் ஆக்குவித்தது" (ஈசாய்-XXIII-8). இம்மட்டோடன்றி, அரசியலுக்கே ஒரு தனிச்சிறப்பளித்தது, வாணிபத்துறையில் ஈடுபடும் ஒரு மக்கட்டொகுதி எத்துணை திரண்ட பொருட் செல்வத்தை ஈட்டமுடியும்; எத்துணை பெரிய காரியங்களைச் செயலாற்ற முற்பட்டு உலகு முழுதையும் வியப்புக்குள் ஆழ்த்தவியலும் என்னும் எண்ணங்களை மக்கள் இனத்திடை முதன்முதலாகத் தோற்றுவித்தது மேன்மைநிலைமேவிய அவ் அரசியல்.

—நாபர்ட்சன்.

## கக. பல்கலைகள்

### அவுரி நீலம்

ஐரோப்பியர் இந்தியரோடு வாணிபம் புரியத் தொடங்குவதற்கு முன்னரே பற்பல நிறங்களாகச் சாயந்தோய்த்தற்கு உதவும் பொருள்களின் மிகுதிக்கும் குணத்திற்கும் அந்நாடு பெயர் பெற்று விளங்கிற்று, உரோமையரால் பெரிதும் பாராட்டப் பெற்ற இருண்ட நீலநிறச்சாயந் தோய்த்தற்குப் பயன்பட்ட வண்ணப்பொருள்களுங்கூட இந்தியாவினின்றே கொண்டுவரப் பெற்றன....எல்லாக் காலத்தும், அவர்களின் கைத்தறிவேலைகள் வகை வகையாகவும், வகைக்கேற்ற அழகுடையன வாகவும் விளங்கின வென்று உறுதியாகக் கூறலாம். வேறு பிற கைவினைகளிலும், சிறப்பாக, உலோகங்களிலும், யானைக்கொம்பிலும் வேலை செய்வதிலும் பெயர் பெற்ற இந்தியர்களின் திறமையைப் பண்டைக்காலத்து ஆசிரியர்கள் புகழ்ச்சி தோன்ற நினைவுறுத்துகின்றனர். ஆயினும், அவற்றினுள் தனிப்பட்ட ஒன்றனையேனும் அவர்கள் விளக்கிக்கூறு கின்றனர் இல்லை.

—ராபர்ட்சன்.

### மென்றூசு நெய்த தமிழர்

சாயந்தோய்த்தற்குத் தென்னாட்டு மக்கள் பயன்படுத்தும் வண்ணங்களைப்போற் செய்தற் பொருட்டுப் பிரஞ்சுக்காரரும் ஆங்கிலேயரும் டானிஷியரும் இந்நாள் ஈறாக மேற்கொண்ட முயற்சிகள்

அத்துணையும் பயனற்றுப் போயின என்பது மறுக்க வொண்ணாத வுண்மை. பருத்தி நூற்பதிலும் நெய்வதிலும் சாயமூட்டுவதிலும், இந்நிலவுலகின் கண்ணுள்ள எல்லா நாட்டு மக்களினும் அவர்கள் மேம்பட்டு விளங்குகின்றனர் என்று அறுதியிட்டுக் கூறலாம். இங்ஙனம் பகர்பவர் செர்மானிய நாட்டவரும், கிறித்துவச்சமய நெறித்தூதுவரும், பேர் அறிஞருமான பர்த்தெலெமி பாதிரியார் ஆவர்......

சொன்னேரா என்பார் தாம் வரைந்த வழிச் செலவு வரலாற்றில், எழுபத்தெட்டு முழநீள முடையனவாயிருந்தும் உள்ளங்கைகளில் அடங்கி விடும் அத்துணை மெல்லிய விலையேறிய ஆடைகள் நெய்தற்கும், அதற்குறிய பருத்தியைச் செடப்பஞ் செய்தற்கும் தமிழர் கையாண்ட முறைகளைப் பற்றிப் பரக்கக் கூறியுள்ளார்.

—தெமர்லே.

கலைவளஞ் செறிந்த நாடு

கங்கைமுதல் குமரிமுனையிறுகப் பரந்தூடட்ட இந்தியத்தீவக்குறையைப் போன்று, மென்கலைகள், பல்கலைப் பனுவல்கள், நாகரிகம் இவையிற்றின் பழைமைச் சுவடுகளைப் பரக்கத் தெரிக்கும் பகுதிகள் இந்நிலவுலகின்கண் வேறெங்கணுமே இல்லை யென்று உறுதியாகக் கூறலாம். என்னைப் பொறுத்த மட்டில், திருத்தளிகள் அறச்சாலைகள் ஒரு சிலவற்றுள் விளங்கும் செதுக்கு ஓவியங் களும், வினைபுரிய மேற்கொண்ட பணியின் பெரு

மையும் இந்நாள்வரை இயற்றி முடித்த எல்லாவற்றையும் மிஞ்சிவிடுகின்றன என்பேன். திருப்பணிக்குரிய மூலப்பொருள்கள் பெரும்பாலும் எத்துணை தொலைவினின்று கொண்டுவரப்பெற்றன, அவை எத்துணை உயரத்திற்கு எடுத்தேகப் பெற்றன என்பனவற்றை மனங்குவிந்து உன்னும்போது, வினைநுட்பச் சிறப்பால் மட்டுமேயன்றி, நேர்ந்த பொருட்செலவாலும் அவை மேம்பட்டு மிளிர்கின்றன.

—கர்ணல்கால்.

ஒற்றைக் கருங்கற்பாறையிற் செய்த சங்கிலி

தில்லையம்பதியிலே பாதிவட்ட வடிவுடைய கட்டடத்தின் மேற்பகுதியைச் சேர்ந்தனவும், நான்கு புறத்தும் அமைந்தனவுமான துளையிட்ட கற்களினின்று மலர் மாலைகள்போல் தொங்கிக்கொண்டிருந்த 548 அடி நீளம் வாய்ந்த கருங்கற் சங்கிலியை வியத்தற்குரியதொன்றாகக் கருதலாம். அவ்வியத்தகு சங்கிலி முடிந்தவேலைப்பாடுடையதாகத் தோன்றுகிறது. கண்ணாடியே போன்று, வந்தடையும் ஒளிக்கதிர்களை மீண்டோடச் செய்யும் அளவிற்கு அக் கருங்கல் நன்கு மெருகேற்றப் பெற்றுள்ளது. ஒவ்வொரு வளையமும் மூன்று அடி ஒரு பெருவிரல் நீளமும், இரண்டு பெருவிரல் ஐந்து நூல் பருமன் குறுக்களவும் கொண்டதாகும். ஒன்றோடொன்று பிணைந்துள்ள அவ்வளையங்களும், வளையத்தொடரைத் தாங்கி நிற்கும் அகன்ற

தூளைக் கற்களும், ஒரே ஒரு கருங்கற் பாறையி னின்று செதுக்கி உருவாக்கப் பெற்றெழுந்தன என்பது தெள்ளிதின் புலனாகிறது.

—தேமர்லே.

கற்பனையும் அறியாத புதுமை

1758-ஆம் ஆண்டிலே, லல்லி என்பார் தஞ்சா வூரை முற்றுகையிடச் சென்றபோது, 50,000 முறை சுடுதற்குத் தேவையான வெடிமருந்தைச் சிதம்பரம் பெரிய கோயிலின் உட்புறத்திலே காப் பில் வைத்திருந்தனராம். தற்செயலாய், அம் மருந்து தீப்பற்றி வெடிக்கத் தொடங்கவும், கற்பனைக்கும் எட்டாத புதுமையொன்று நிகழ்ந்தது. அவ்வெடியி னால், நீளமாகவும் வில் வளைவாகவும் அமைந்த கட்டட மேற்பகுதியை ஒத்த இரு கூறுகளாகத் திறக்கவே இயன்றது. பிளவுற்று மேலெழுந்த இரு கூறுகளும் அளவிற் பெருக்கமுற்ற காற்றைப் புறம்போகவிடுத்து மறு நொடியில் உழலையில் இயங்குவனவே போன்று ஒத்த காலத்தில் விழுந்து மூடிக்கொண்டன. பிரிந்து ஒன்று சேர்ந்த பகுதி யின்கண் சிறிது வெடிப்பு மட்டுமே காணப்பட் டது. இவ்வெதிர்பாராத நிகழ்ச்சியினால் சுவர் களுக்கோ அன்றிப் பாதி மதிவட்டக் கட்டடத்தின் உறுதிக்கோ கேடொன்றும் நேரவில்லை. இந்த வர லாற்றினை லெகூதெப்ளேக்ச் என்பார் உண்மை யென உறுதிப்படுத்துகிறார்.

—தேமர்லே

## கூ. மொழி

### தமிழின் பழமை

சென்னைக்குச் சற்று மேற்பாலில், கடற்கரையி னின்று தொடங்கும் ஒரு எல்லைக்கோடு சித்தூர், வேலூர் வழியூடே சென்று சேலத்தை நோக்கி இறங்கி அதனை உள்ளடக்கியவாறு, நீலகிரிப் பக்க மாகத் சாய்ந்தேகி, அங்கிருந்து ஏலக் குன்றுகளை நோக்கி ஏறக்குறைய நேராகக் கீழிறங்கி, அவற்றினை யொட்டிச் சென்று, மேற்குப் புறமாகச் செல் நெறி மாறிக், கடலோரமாகவுள்ள திருவனந்தபுரம் வரைப் போந்து முடிவுறுவதாகக் கருதுவோமா யின், அவ்வரையறையுள்ளடங்குவது தமிழ் வழங் கும் நிலப்பரப்பாகும்.

முற்காலத்திலே இன்னும் மிகுந்து விரிந்த நிலப்பரப்பிலே தமிழ்மொழி நிலவிவந்தது. மேற் குக் கடற் புறத்திற் பேசப்படும் மலையாளம் தமிழ் மொழியின் பண்டைய திரிபேயாகும். எங்ஙனமாயி னும், எட்டாம், ஒன்பதாம் நூற்றாண்டுகளிலே கூட தமிழ் அரசியல் மொழியாகவும் கலைப்பயிற்சிக்குரிய மொழியாகவும் பயன்பட்டு வந்தது. கி. பி. 750 (சற்றேறக்குறைய) 774, 825-ஆம் ஆண்டுகளில் கொச்சி யூதர்களுக்கும், மலையாள நெஸ்தோரியன் வகுப்புக் கிறித்துவர்களுக்கும் அளிக்கப் பெற்ற புகழ் வாய்ந்த "சிறப்புரிமைகள்" தமிழிலேதான் வரையப்பட்டுள்ளன.

—வின்சோன்.

தென்னாட்டின் பொதுமொழி

திராவிட நாட்டில்—அதாவது விந்தியமலை, நர்மதையாற்றுக்கும், குமரிமுனைக்கும், இடைப்பட்ட நிலப்பரப்பு முழுவதிலும் சமச்கிருதத்தோடு எத்தகைய தொடர்பும் இல்லாத தனிமொழிகள் காணப்படுகின்றன. அவை முன்னை மறைமொழிக்குப் பன்னெடுங்காலத்திற்கு முன்னர்த் தோன்றி நிலவுகின்றன. பண்படாத பழங்காலத்து மக்கள் பயன்படுத்தி வந்த பண்டை மொழியொன்றினை நிலைக்களனாகக் கொண்டு வடமொழிச் சார்பு சிறிதளவேற்று அம் மொழிகள் திருந்திய நிலையினை எய்தலாயின. திராவிட மொழிக் குழு உள்ளபடியே இணைக்கும் பருவத்தைச் சார்ந்தது. அதாவது மக்கள் உள்ளத்தில் யாவும் குழம்பியும், கலந்தும், புணர்ந்தும், கலக்க நிலையிலிருந்த காலத்தே தோன்றியது. திராவிட மொழி இந்தியாவின் எல்லாப் பகுதிகளிலும் வழங்கலுற்றுப் பண்டை மொழியாக விளங்கிப் பின்னர் ஆரியரால் சிறிது சிறிதாகத் தென்னாடு நோக்கி வலிதின் ஒதுக்கப் பெற்றிருத்தல் கூடும்...........

இத்தறுவாய் இந்திய நாட்டுப் பொதுமொழியாகத் தகுவது இந்துத்தானி என்றெல்லாம் பரவி வரும் தவறான கொள்கையை நாம் வன்மையாகக் கண்டிக்கக் கடமைப்பட்டுள்ளோம். கீழ்வருமாறு "கால்டு வெல்" அவர்கள் கூறுவதை நாமும் வலியுறுத்திக் கூறுகிறோம் :

"ஆங்கிலமாயினும், வேறு எந்த வேற்று மொழியாயினும் தென்னாட்டவர் வாழும் எந்தப் பகுதியிலும் பொதுமொழியாகும் வாய்ப்பைப் பெறும் என்பதற்குச் சிறிதும் இடமில்லை. நூற்பெருக்க முடையதும், சொற்செலவு மிக்கதும், போற்றி வணங்கப்படுவதும், சமயத்தலைமைப்பணியாற்றும் இனத்தவர் வழங்கும் மொழியாகவுமுள்ள சமச்கிருதத்தைச் சென்ற இரண்டாயிரம் ஆண்டுகட்கு மேலாக உறுதியுடன் எதிர்த்து நின்று தற்காத்துக் கொள்ளும் திராவிட மொழிகள் வேறு எத்தகைய மொழியின் தாக்குதலையும் புறங்காணச் செய்து வெற்றி வாகை சூடும் என்பது தேற்றம்."

—வின்சோன்.

## தமிழே முதன்மொழி

திராவிடக்குழு மொழிகள் ஐந்தனுள் குறைந்த அளவு தமிழ், தெலுங்கு, கன்னடம் என்னும் மும்மொழிகளின் பிறப்பாயினும் சமச்கிருதத் தோற்றுவாயினின்றும் முற்றும் வேறுபட்டதாகும். இலத்தீன் மொழியினின்று ஆங்கிலமும், உருதுவினின்று இந்துத்தானியும், பெறும் அளவிற்கே பிற சொற்கள் இம்மொழிகளில் விரவியுள்ளன. இம்மூன்றனுள்ளும், தமிழ்மொழி ஒன்றே தூய்மை கெடாது தனித்தியங்க வல்லது - மேலும் தமிழையே மற்றிரண்டின் தாய் மொழியாகப் பலகாலும் கருதுகின்றனர் ஆராய்ச்சி வல்லுநர்.

—சவியே இரய்மோன்.

**உண்மையான திராவிடக் காவியம்**

தமிழ்மொழியிலே, தூய தனித் தமிழ்ச் சொற்களால் யாத்த பாக்கள் பொலிவுற்றுயர்கின்றன. வட சொற்கள் விரவிவரும் பாக்கள், விரவும் அளவிற்கு மங்கி மதிப்பிழக்கின்றன. தெலுங்கு மலையாளக் கவிகளோ, இதற்கு நேர்மாறானவை. ஆதலின், தமிழ்க் காவியமே உண்மையான திராவிடக் காவியமாகும்.

—வின்சோக்.

**இனிமை செறிந்த செம்மொழி**

தமிழ் இனிமையும் அழகும் செறிவும் நிறைந்த உலக மொழிகளுள் ஒன்றெனெ அறுதியிட்டுக் கூறலாம். கீழ்வரும் டாக்டர் "கால்டுவெல்" கருத்துரையும் அறிந்து பாராட்டற் பாலது.

"திராவிட மொழிகளுள் தமிழ் மொழியொன்றே வடமொழியினைத் தழுவுவதோடமையாது அதற்கொப்பதுமாகி; ஒழுக்க நெறியினை உணர்த்துங்காலேனும் அதனினும் அதனினும் உயர்ந்தும் விளங்குகிறது." கவிஞர் ரோன்சார் உரை நடைப்பகுதிக்குப் பயன்படுத்தும் மொழியேயன்றிப் பிறிதொரு நன்மொழியினைப் பிரெஞ்சுச் செய்யுட் பகுதிக்குக் கையாளுதல் வேண்டும் என எண்ணி ஏக்க முற்றிருந்தார். அவர் தமிழை அறிந்திருந்தால், மன மகிழ்ந்திருப்பார்.

—பியேர் கயோ

**வளம்பட வளர்ந்த இலக்கியம்**

தமிழிலக்கியத்தில் உரை நடைப்பகுதி மிகவும் சுருங்கிய நிலையிலிருப்பினும், செய்யுட் பகுதி வளம் பட வளர்ந்து புதுமை நலம் நனி வாய்ந்து ஒப்புயர் வற்று ஓங்குகிறது, தமிழிலக்கியம் வளமிக்கது மட்டுமன்று; வேற்றிலக்கியத் துணையேதுமின்றித் தானே தோன்றித் தனித் தியங்குவதொன்று. மற் றுஞ் சிறப்பாகக் குறிப்பிடத் தகுவன அதன் கால வரை கடந்த தொன்மையும், தூய தனித்தமிழில் இயங்கும் தன்மையுமேயாம். பார்ப்பனீய அல்லது சமண் சமயச் சொற் செலவால் இன்னும் மாசுபட ராத அத்துணை முந்தைய தமிழிலக்கியத்தின் நிலை யையே ஈண்டு நவிலப்படுகிறது. பார்ப்பனீயம் தமிழகத்து இலக்கியத்திற்குக் கூற்றாக வந்து தொலைந்தது. தொடக்கத்தில் இதன் போக்கு எதிர்த்து ஒறுக்கப்பெற்றும் கால நடையில் நன்கு காலூன்றிய அந்நாள்தொட்டே கொள்கையில் மாறுபட்ட செய்யுட்களை வெறுத்தும் சிதைத்தும் ஊறு விளைப்பதில் முனைந்து நின்றது. உருவ வழி பாடு முதலான சமயக் கோட்பாடுகளைப் பொருட் படுத்தாத சிவவாக்கியர் பாடல் போன்றவற்றுள் இடைச் செருகல் பல மிடையப் பெற்றன. புதுத் தெய்வங்களின் புகழ் போற்றும் வைப்புமுறை திணிக்கப்பெற்றன. இங்ஙனமே வடமொழியி லுள்ள சில பகுதிகள் மொழி பெயர்த்துத் தமிழ்க் காவியங்களுள் இடையிடையே செருகப்பெற்றன. இதனாலேயே தமிழிலக்கியம் பிறமொழி உதவி

யால் உருவானது என்னும் தவற்றெண்ணம் நெடுங் காலம் பரவி நின்றது. பதினைந்தாம் நூற்றாண்டு வரை பலராலும் பாராட்டப் பெற்ற ஞான வெண்பா போன்ற பெருநூற்களனைத்தும் கட்டோடு அழிக்கப்பட்டன. பார்ப்பனர் ஆட்சித் தலைமைக்குட்பட்ட திருவிதாங்கூர் போன்ற நிலப் பகுதிகளில் கிடைத்தற்கரிய பழந்தமிழேட்டுச் சுவடிகள் அனைத்தும் தீக்கிரையாயின.

தமிழகத்து நாட்டுப் பாடல்கள் என்ற நூலிலே சார்ல் கௌவர் " தமிழிலக்கியத்தை இன்மையாக்கிப் புராணக் காதைகட்கு ஆக்கந்தேடு மாற்றால் நலங்கெடா துயிர் வாழ்வோர் தமிழைச் சிதைத்தும் திரித்தும், குலைத்தும் உவகை பூத்தனர் " என்று எடுத்தியம்புவது ஈண்டு நினைவு கோரற்குரியது.

—பியேர் சுயேஃ.

## ௬௩. தமிழகத்தின் நலம் புனைந்துரைத்தல்

"என்றாவது ஒருநாள் யான் நாடுகடத்தப்பெற்றுத் தொலைநாட்டில் யாண்டேனும் எனது வாழ்நாளின் இறுதிப்பகுதியைக் கழிக்க நேரிடின் எனது என்புகளைக் காத்துதவும் அந்நாடு தமிழ்நாடாகவே இருக்கும். அதுகாலை, எனது கல்லறையின்மீது இங்ஙனம் செதுக்கப்படவேண்டுமென யான் விழைகின்றேன்.

"வழிப்போக்கனே! என்னை ஏற்றுக்காத்
தருளுமாறு தமிழகத்தைக்கேட்டுக்கொண்டேன்
என்று பிராஞ்சுநாடு சென்று சொல்லிவிடு!"

அத்தமிழணங்கு என் கட்புலனுக்கு இன்பம் தந்தாள்; என் நெஞ்சத்தின் கிளர்ச்சியாயும் அமைதியாயும் நின்றாள்; எனது மனத்துயரை மறக்கச் செய்தாள். வாழ்வினில் விருப்பை மீட்டெனக் களித்தாள்; ஆயினும், இமைப்போதின் அருமைப் பாட்டையும் அவள் எடுத்தோதினாள்; கலையின்மாட்டு யான் கொண்ட கருத்தின் பெருமதிப்பை இருமடங்காக்கினாள்; வண்மையும் இனிமையும் செறிந்த குறிக்கோளினின்று விரிந்து விளங்கும் வலியினை மேன் மேலும் உவப்புடன் என்னைப் போற்றச் செய்தாள்.

—மெய்ந்த்ரோன்.

## கசு. பிற்சேர்க்கை

ஈண்டு, வேண்டுமென்றே குறிப்பிடாமல் விடுத்த முப்பொருள்களைப்பற்றிச் சிறிது விளக்கந் தர விழைகிறேன். 1. ஆரியர் தமிழர் போர், 2. சமயம், 3. குலம்:

(1) இந்திய வரலாற்று ஆசிரியர்கள் அனைவரும் ஆரியர் தமிழர் போரை ஒருமுகமாக எடுத்தியம்புகின்றனரேனும், வேங்கட மலையை வடவெல்லையாக வகுத்துக்கொண்ட தமிழரைப் பொறுத்தமட்டில், இவர்கள் கூற்றில் எனக்கு எளிதில் நம்பிக்கை எழவில்லை. ஆரியரோடு பூசல் கொண்டவர் தொல்காப்பியர் காலத் தமிழரும் அல்லர், "இன்றைய ஆரியரும்" அல்லர் தலைக்காலத்து நாகரிக முதிராத முரட்டு ஆரியர்.

நிலப்பரப்பால் மிக விரிந்த இந்தியாவின் வடபாலில் ஆரியர் நுழைதற்கு முன்னரே தென்புறத்துக்கடையீற்றிலுள்ள தமிழகத்தில், தமிழர் நிலையாகக் குடியேறிவிட்டனர் என்று கடவுட்டொண்டர் கால்டுவெல் கருதுவதும்; ஆரியரை வேண்டா விருந்தினராய் மதித்து எதிர்த்துப் போரிட்டுத் "தாஸ்யு" என்னும் இழிமொழி ஏற்றோர், இந்தியாவின் வடபுறத்தே, வடமேற்றிசையில், இன்றளவும் வாழ்ந்து வருபவரான "ஜாட்" என்னும் வகுப்பினரே யன்றித் தமிழர் அல்லர் என்று அறிஞர் ஷெபேல் (Schobel - Reseahches) ஆராய்ந்து கண்ட முடிபும் என் கொள்கைக்கு அரண் செய்வனவாகும்.

மேலும், புலவர் பெருமக்களால் ஆனினத்தோடும் பாலரோடும் பாவையரோடும் ஒப்ப வைத்து எண்ணப்படுபவரும்; செறுகளம் என்றாலே வெருவியோடும் இயல்பினர் என்று மாக்ஸ் முல்லர் கால்டுவெல் போன்ற ஆராய்ச்சி வல்லுநரால் கருதப்படுபவரும் மறக்குடித் தமிழரைப் பொருது வென்றனர் என்றால், இதனை நாம் நம்புமாறெங்ஙனம்? தில்லை உள்ளிட்ட தொல்பதிகட்குப் போரிட்டு வென்றபின் அவர்கள் குடியேறினார்களா? அன்றேல், அன்பால், அருளிரக்கத்தால், நெகிழ்ந்த தமிழனது மனம் ஒப்பிய அழைப்பின் மீது வந்தார்களா? என்பதும் உள்ளுதற்குரியது.

நல்லார் நெஞ்சத்தில் இடம்பெற அஞ்சும் வஞ்சகச் சூழ்ச்சிகளால் மாசற்ற தமிழன் பருவுலகில் தோல்வி கண்டான் எனில் சாலும் - இதன் பொருட்டே இக்கூறிய சச்சரவு தமிழனை மாய்த்துத் தாழ்த்தும் நச்சரவு எனக்கருதி விடுத்தனன்.

(2) சமயம். "அன்பே சிவம்" "அறிவே கடவுள்" என்னும் முதிர்ந்த கொள்கையினரான "அறிவர்" வழிவந்த பண்டைத் தமிழர் ஊக்கமும் உழைப்பும் மிகுந்த வாழ்க்கையில், சமயப் புறக்கோலங்களும் சமயச் சார்புடைய சடங்குகளும் அவ்வளவாக இடம் பெற்றிலவாதலின், மேற்புலத்தார்க்குத் தமிழர் தம் சமயத்தைப் பற்றிப் பேசும் செவ்வி வாய்க்கவில்லை - ஒரு சிலர் தம் அறியாமையைப் புலப்படுத்தித் தமிழர், "சமயமிலிகள்" என்றும் "ஆண் பெண் உறுப்புக்களை" இலிங்க வடிவாக அமைத்து வழிபாடு புரிபவர் என்றும் பழிமொழி

பகர்ந்தனர்; பகையுள்ளம் பூண்ட வடவாரியரின் இழி தகைமை வாய்ந்த நூல்களையே மேற்கோள்களாக எடுத்தாண்டு தமிழினை இகழ்ந்து வசைமொழி புகன்றனர்.

வியாசர்பெருமான் ஆரிய மறைநூலினை நான்கு பகுதிகளாகச் செப்பமுற வகுத்தற்கு மிக முற்பட்ட காலத்திலிருந்தே தமிழரும், தமிழர் இனத்தரான திராவிடப் பெருமக்களும் சமய நெறிநின்றொழுகினர் என்பது தேற்றம். 3000 ஆண்டுகட்கு முன்னர்த் தமிழர் வாணிப உறவால் சிறப்புற்றோங்கிய பபிலோனியா என்னும் கல்தேய நாட்டில் அகழ்ந்தெடுக்கப்பட்டு, இன்று பிரான்சில் லூவர் கண்காட்சிச்சாலையில் விளங்கும் சிவன்கோயில் கருவறை எதிரில் அமர்ந்த திருக்கோலத்தில் அமைந்த விடையுருவம் செதுக்கப்பெற்ற பலகையும் (Mission de Sarzec feuille de Tello. A. O. 2354) மோகஞ்சதாரோ வெளியில் நிகழ்ந்த புதைபொருள் ஆராய்ச்சியின்போது காணக்கிடந்த இறைவனை நினைப்பூட்டும் உறுப்பில் வடிவங்களும் நம் மூதாதையர் "சமயமிலிகள்" என்போரின் பொருந்தாக் கூற்றினைப் பரக்கச் சாற்றும்.

மற்றும், இலிங்கம் (லிக்—சித்திரி) என்ற சொல் உலகு அனைத்தையும் ஓவியந்தீட்டல், அழகு பெற அமைத்தல் என்ற பொருளுடையது என்பதையும்; இறைவன் தனக்கென ஒரு வடிவிலன் என்பது தோன்ற, கை கால் கண் மூக்கு முதலிய உறுப்புக்கள் ஏதுமில்லா ஒரு பிழம்பு வடிவாக

வழிபாட்டின் பொருட்டுத் தெளிந்த காட்சியினர் அமைத்தனர் என்பதையும் அறியாதார் யார்?

தேஜோபிந்து உபநிடதத்திலும் கடோப நிடதத்திலும் இறைவன் மக்கள் நெஞ்சத்தில் உள்ளான் என்றும், அவன் பெருவிரல் பருமன் அளவினன் என்றும் (பெருவிரல் இலிங்க வடிவாகக் காட்சி தருவதையும் நோக்குக); எஜுரிலும் பஸ்மஜாபாலத்திலும், இறைவன் பிழம்புருவில் வைத்து வணங்குதற்குரியன் என்றும் எடுத்தோதிய வாய்மையாளர் வழிவந்தேம் யாம் என்று செம் மாந்திருந்தோரே முரணி மலையும் பழைமைகள் புனைந்து உண்மையைக் குழப்பினர் எனில், இவர் தம் ஏடுகளை நம்பி நெறிகோடிய வேற்றுச் சமயத் தார் எங்ஙனம் உண்மையை ஓர்ந்துணரப் போகின் றார்! இவர்தம் வெற்றுரைகளைத் தொகுத்துத் தான் யாது பயன்?

(3) குலம்—தழைத்தோங்கும் மக்கட்டொகுதியின் ஆணிவேரிலேயே, பிறப்பால் உயர்வு தாழ்வு என்னும் வேற்றுமையைப் புகுத்திச் செருக்கு, அழுக்காறு, பகைமை உள்ளிட்ட புறத்தே மின்னும் நச்சுப் பழங்களை நல்குவிக்கும் குலமுறை பண்டைத் தமிழர்க்கு உடம்பா டன்று. அவர்கள் தங்கி வாழ்ந்த நிலக்கூறுபாட்டுக் கியைந்தவாறு ஐந்து பிரிவினராகக் கருதப்பட்டன ரேனும், அவர்கள் அனைவரும் ஒரு தாயின் வயிற்றுதித்த மக்களேபோல்வராய்ப் பொதுநலம்பேணி இணக்கமுற இனிது வாழ்க்கை நடத்தினார்கள்.

ஒற்றுமையைத் துடைத்து, மறவலியை வேர் பறித்து மீளா அடிமை நிலையில் கொண்டுய்த்த இந்தப் பாழும் குலமுறை தமிழரிடை நுழைந்தமைக்குக் காரணம், இறப்பையும் பிறப்பையும் சூழ்ந்துள்ள மறைபொருளைப்போல் தெளிவு குறைந் துள்ளதென எவருங் கூறுர். ஆதலின், மேற்புலத் தறிஞர் குலத்தைப்பற்றிப் பேசுங்கால், ஆரியர் உடன்எடுத்துவந்த கடைச்சரக்கின் பெருமையை அன்றிச் சிறுமையையே குறிக்கின்றவர் ஆகின்ருர். இப் பயனில் உரைகள், எடுத்துக்கொண்ட பொரு ளுக்குப் புறம்பானவை அல்லவோ!

—தொகுப்பாசிரியர்.

தமிழ் வெல்க!

# பெயர் விளக்கம்

## 1. டாலமி

யவனநாட்டவர், பெருமைவாய்ந்த வானநூல் வல்லுநர். கி. பி. 2-ஆம் நூற்றாண்டில் எகுபதியில் பிறந்தவர். தமிழ்நாட்டு வாணிகத்தொடர்பால் சிறப்புற்றிருந்த எகுபதியின் மாபெரும் துறைமுகப் பட்டினமாகிய அலெக்சாந்திரியாவில் நெடுங்காலம் வாழ்ந்தவர். இடைக்காலத்தவரால் (395-1453) மிகவும் பாராட்டப்பெற்றதும், 8 தொகுதிகளாக வெளிப்போந்ததுமான உலகநூலின் ஆசிரியர்.

## 2. பிளினி

17 தொகுதிகளாக இயற்கைநூல் இயற்றி உதவியவர். இத்தாலியநாட்டிலே வெரோனா நகரிலே, கி. பி. 23-இல் பிறந்தவர். நீரோ ஆட்சிக்காலத்தில் ஸ்பெயினிலும் ஆப்ரிக்காவிலும் அரசிறைக் காவலராகத் தொண்டாற்றியவர். மிசேன் மேட்டுமூலையின் கப்பற்பகுதித் தலைவராய் அமர்ந்து கடற்செலவில் திளைத்தவர். தமது 56-ஆம் அகவையில் வெசூவியஸ் எரிமலைக்காட்சியை நேரில்பார்க்கச் சென்று தற்செயலாய் மலையுமிழ்ந்த நச்சுப்புகை தாங்கலாற்றாது உயிர் நீத்தார்.

## 3. மார்க்கோ-போலோ

இத்தாலிய நாட்டிலே, வெனிஸ்நகரிலே, 1250-இல் பிறந்தவர். வழிச்செலவில் மிகுவிருப்புடைய இவரது தந்தையும், இளைஞரான இவரும் 1271-இல்,

வழிப்பயணம் மேற்கொண்டனர். இவர்களிருவரும் மங்கோலியாவிலும், சீனத்திலும் சிறிதுகாலம் தங்கினர். ஆங்கிருந்து புறப்பட்டு இந்தியா, பாரசீகம், இன்னும் சிற்றாசியாவிலுள்ள சில நாடுகளையும் சுற்றிப் பார்ப்பதில் ஆண்டுகள் பல கழித்தபின்னர் மீண்டும் சுமத்திராதீவின் வழியாக 1295-இல் இவர்கள் தாய்நாடு மேவினர். இங்ஙனம் தாய்நாடு மீளுமுன் (1293-இல் இம்முறை கடல்வழியாக) இவர்கள் இந்தியா போந்திருத்தல் வேண்டும். மெட்லிகாட் (Medlycott) முடிபும் இதுவேயாம். பிறகு, இவர் கப்பல் மீகாமனாகத் தொண்டாற்றினார். அதுகாலை இவர் சிறைவாழ்வும் துய்க்க நேரிட்டது. இவர் தமது 73-ஆம் அகவையில் இறந்தார். இவர் வரைந்த வழிச்செலவு வரலாறு பல நாடுகளிலும் மொழிபெயர்க்கப் பெற்றுச் சிறப்புடன் விளங்குகிறது.

### 4. மெகாஸ்தெனஸ்

வரலாற்றுநூல் உலகநூல் இவையிரண்டின் ஆசிரியர் யவனநாட்டவர். மாபெரும் போர்மறவர் அலெக்சாண்டரின் படைத்தலைவர்களுள் ஒருவரும் சீரிய நாட்டுப்புரவலருமான செலுக்கஸ் நிகாடோர் என்பவர் சார்பாக, கி. மு. 311-ஆம் ஆண்டிற்குமேல் அயல்நாட்டு அரசியற்றூதுவராக இந்தியாபோந்து சின்னாள் தங்கியவர்.

### 5. ஸ்ட்ராபோன்

சற்றேறக்குறைய 2000-ஆண்டுகட்குமுன்னர்ச், சிற்றாசியாவிலே அர்மேனியநாட்டுக்கு அண்மையில்

பிறந்தவர். இவரே முதன்முதலாக உலகநூல் வரைந்தவர். பழைய பெருநிலப்பிரிவுகள் மூன்றையும் நன்கு சுற்றிப்பார்த்த பின்பு உலகநூல் ஒன்று வரைந்தளிக்க முயன்று 17 தொகுதிகளாக வெளியிட்டார்.

## 6. அகஸ்டஸ்

உரோமையநாட்டுப் பேரரசர். சற்றேறக்குறைய 2000-ஆண்டுகட்கு முன்னர் வாழ்ந்தவர் (தோற்றம்: கி. மு. 62 ஒடுக்கம் கி. பி. 14). பாண்டிய மன்னர்களுள் ஒருவர் இவரது அரசவைக்குத் தூது அனுப்பிய செய்தியை ஸ்ட்ராபோன் (XV-1-4) குறிப்பிட்டுள்ளார். மலையாளக்கடற்கரையில் இவருக்கென எடுப்பித்த கோயில் ஒன்று இருந்ததென்று வரலாற்று நூலோர் கூறுவர். இவர் நெடுங்காலம் செங்கோல் ஓச்சிய பின்னர்த் தமது 76-ஆம் அகவையில் பல்லோரும் துயர் உழக்க விடுத்து உயிர்நீத்தார்.

## 7. எரோதோத்

கி. மு. 484. யவனநாட்டில் பிறந்தவர். வரலாற்றுத்துறையின் தந்தையெனப் பெயர்சூட்டப் பெற்றவர். உண்மையோடியைந்த வரலாற்றுச் செய்திகளை ஒன்பது பிரிவுகளாகத் திறம்பட வகுத்து வெளியிட்டுப் பரிசில்கள் பல பெற்றவர். செய்திகளைத் தொகுத்தற்கென்றே பல நாடுகள் சென்று வந்தவர்.

## நூல் விளக்கம்


1. Dr. GUSTAVE LE BON — Les civilisations de l'Inde - Librairie Firmin Didot — Paris, 1387.

2. SONNERAT — Voyage aux Indes orientales et à la Chine (1774-1781) - Tome I — Paris, 1782.

3. W. ROBERTSON — Recherches historiques sur l'Inde ancienne Janet et Cotello — Paris, 1821.

4. COLLIN DO BAR — Histoire de l'Inde ancienne et moderno - Tome I - Lib. Le Normant — Paris, 1814.

5. M. DE MARLES — Histoire Générale de l'Inde ancienne et moderne (depuis 2000 ans avant Jésus Christ jusqu'à nos jours) Tome I ot III - Lib. Emlor Frèros — Paris, 1828.

6. PRINCE ALEXIS SOLTYKOFF — Voyage dans l'Inde - Lib. Garnier frères — Paris, 1841.

7. LEGOUX DE FLAIX—Essais historique, géographique et politique sur l'Indoustan - Tome I, II et III - Lib. Pougin — Paris, 1807.

8. DE LA FLOTTE — Essais historiques sur l'Inde Lib. Hérissaut le Fils—Paris, 1769.

9. REINAUD — Mémoire géographique, historique et scientifique sur l'Inde — Imprimerio Nationale Paris, 1849.

10. ABBE GUYON — Histoires dos Indes Orientales - Tome I, II et III - Lib. Pierre — Paris, 1744.

11. DE JANCIGNY & XAVIER RAYMOND — L'Univers - Inde - Lib. Firmin Didot Frères — Paris, 1835.

12. PIERRE SUAU — L'Inde tamoule - Lib. H. Oudin Paris, 1905.

13. M. MAINDRON — Dens l'Inde du Sud - Tome I et II - Lib. Alphonse Lemerre — Paris, 1907.

14. JULIEN VINSON — L'Indo Dravidienne - Société d'Ethnographie — Paris, 1865.

15. VINCENT SMITH — The Oxford History of India- Clarendon Press — Oxford 1920.

VINCENT SMITH — The Early History of India Clarendon Press — Oxford, 1914.

16. Rev. ROBERT CALDWELL — Comparative grammer of the dravidian languages - Kegan Paul — London, 1913.

17. BARNETT — Antiquities of India - Philip Lee Warner — 1913.

18. Z. A. RAGOZIN — Vedic India - Fisher Unwin — London, 1899.

---

குறிப்பு :—இந்நூல்கள் அனைத்தும் புதுவை அரசினர் பொது நூல் நிலையத்தில் உள்ளன.

## இரண்டாம் பாகத்தில்

Pierre Suau, W. Hunter, S. M. Gentilhomme Maruis Fontane, de Jancigny, E. Lamairesse Blancard, Abbè Du Bois முதலானோர்களும் இம் முதற்பாகத்தில் குறிப்பிட்ட நூலாசிரியர்களும் கீழ்வரும் பொருள்கள்பற்றி வரைந்தளித்த கருத்துரைகள் தொகுத்துத் தரப்படும் ;

குமரிதொட்டு இமயம்வரையும், பின்னர் விந்தியம்வரையும், இன்னும் பின்னர் வேங்கடம்வரையும் தமிழ்மொழி தனிச் செங்கோலோச்சியும் வரம்புட்சுருங்கியும், முடிவாக, VIII-ஆம் நூற்றாண்டில் தன்னிலையிற் குன்றியும் விளங்கிய வரலாறுகள் ; தமிழின் தொன்மை மென்மை மேன்மை தனித்தியங்கும் தன்மை இன்ன பிற.





தமிழகத்தின் புகழ்பரந்த பெருவாழ்
வினைக் கண்டும் கேட்டும் மகிழ்ந்த
மேனாட்டறிஞர் கூறியன இந்
நூலுள் மிளிர்வன.



